# தபால் தொழிலாளர்களுக்கு மகத்தான ஆதரவு

ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்

மலர் 4. இதழ் 44 | புதன்கிழமை 31—7—46 | விலை 2 அணா (வெளிநாடு: 0-2-6)

*பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து அகில இந்திய தபால் தொழிலாளர்கள் வீரப் போர் நடத்தி வருகிறார்கள். இவர்களின் கோரிக்கைகளுக்கு இணங்கினால், மற்ற தொழிலாளர்களும் இதுமாதிரி கேட்பார்களே, தான் வைத்திருக்கும் ஆள் குறைப்பு, சம்பளக் குறைப்பு திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வர முடியாது போகுமே என்று மிரளுகிறது ஏகாதிபத்தியம். அதனால்தான், எடுத்த எடுப்பிலேயே இவர்களை நசுக்கிவிட முயற்சிக்கிறது.*

**இந்தப் பேயாட்டத்தை இந்தியத் தொழிலாளிகள் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கவில்லை. பம்பாய் மாகாணத்தில் 5 லட்சம் பேர் பொதுவேலை நிறுத்தம் செய்தார்கள். சென்னை மாகாண தொழிற்சங்க காங்கிரஸ் ஜூலை 23-ல் சென்னையிலும், 25-ல் மாகாண முழுவதும் பொதுவேலை நிறுத்தம் செய்யுங்கள் என்று போர் முரசு கொட்டியது.**

தபால் தொழிலாளர்கள் பரிபூர்ண வெற்றி யடையும் வரையிலும், அவர்களுக்கு ஆதரவாக நாடெங்கும் கிளர்ச்சி அலைகள் மோதி மோதி அடிக்கட்டும் என்று இந்திய கம்யூனிஸ்டு கட்சியின் மத்திய கமிட்டி நம்மை அறைகூவி யழைத்தது.

"ஸ்ட்ரைக் செய்தவர்கள்மீது நடவடிக்கை எடுத்தால், பஞ்சாலைத் தொழிலாளர்கள் அதற்குப் பதில் சொல்லுவார்கள்" என்று எச்சரிக்கை விடுகிறார் அ. இ. தொழிற் சங்க காங்கிரஸ் தலைவர் மிருணாள் காந்தி போஸ்.

வடநாட்டு பிரதான பட்டணங்களிலெல்லாம் தபால், தந்தி, டெலிபோன், டிரங்கு டெலிபோன் முதலிய சகலமும் நின்றுவிட்டன. கல்கத்தாவில் ஆங்கிலோ-இந்திய டெலிபோன் தொழிலாளர்களும்கூட பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். போராட்டம் தினே தினே விரிவடைகிறது; வலுப் பெறுகிறது.

ஆந்திர தேசத்திலும் கேரள நாட்டிலும் தபால்காரர் போராட்டத்தை தலைமை தாங்கி நடத்துகிறது செங்கொடி.

## சென்னையில் 50,000 பேர்

ஸ்ட்ரைக் ஆரம்பித்ததுமுதல் மாகாண தொழிற்சங்க காங்கிரசும், சென்னை ஜில்லா கம்யூனிஸ்டு கட்சியும் பொதுக்கூட்டங்கள் மூலமும் நோட்டீஸ்கள் மூலமும் போராட்டத்துக்கு ஆதரவாகப் பொதுமக்களைத் திரட்டின. ஸ்ட்ரைக் கமிட்டி அமைக்கப்பட்டு, அதில் நமது தோழர்கள் முக்கிய பங்கெடுத்து வருகிறார்கள்.

நகரில் உள்ள சகல தொழிற்சங்கங்களும் கூடி ஜூலை 23-ந்தேதியன்று பொதுவேலை நிறுத்தம் செய்யத் தீர்மானித்தன. அன்று காலை முதலே மின்சாரம், தண்ணீர் சப்ளை போன்ற ஜீவாதாரமான தொழில்களைத் தவிர, டிராம், பஸ் போன்ற சகல தொழில்களும் நின்றுவிட்டன. திருவல்லிக்கேணி ஹேர் டிரஸ்ஸிங் சலூன் தொழிலாளர்களும் இவ்விஷயத்தில் முன்னணியில் நின்றது பாராட்டத்தக்கது. மேலும், நகரிலுள்ள சகல காலேஜ் மாணவர்களும், ஹைஸ்கூல் மாணவர்களும் ஸ்ட்ரைக் செய்தார்கள். வியாபாரிகள் தாங்களாகவே கடையை மூடி ஹர்த்தால் செய்தனர்.

சென்னை நகரின் சரித்திரத்திலேயே சகல கட்சித் தலைவர்களும் ஒன்றுபட்டு போராட முனைந்தது இதுதான் முதல் தடவை.

நகரிலுள்ள சுமார் 45 போஸ்டாபீஸ்களும் மூடிக்கிடந்தன. தமிழ், ஆங்கில தினசரி பத்திரிகைகளில் வேலை செய்யும் அச்சுத் தொழிலாளர்களும் ஸ்ட்ரைக் செய்து விட்டார்கள். மாபெரும் போரில் இறங்கப் போகிற கார்ப்பரேஷன் தொழிலாளர்களும் அன்று ஒத்திகை பார்த்தார்கள்.

மாலை 3½ மணிக்கு பீப்பிள்ஸ் பார்க்கிலிருந்து ஸ்ட்ரைக்கில் ஈடுபட்டிருக்கும் பி. அண்டு ஸி. தொழிலாளர் உட்பட சகல தொழிலாளர்களும், மாணவர்களும் அடங்கிய ஒரு மைல் நீளமுள்ள ஊர்வலம் கிளம்பி, திருவல்லிக்கேணி கடற்கரைக்கு சென்றது. அங்கு மாகாண தொழிற் சங்க காங்கிரஸ் தலைவர் வி. சக்கரை செட்டியார் தலைமையில் 50,000 பேர்கொண்ட பொதுக் கூட்டம் நடந்தது. சர்வ கட்சிக் கொடிகளும் மேடையில் பறந்தன.

தோழர்கள்: ஆர். ராமநாதன், பி. ஜீவானந்தம், பி. ராமமூர்த்தி, பி. ஆர். கே. சர்மா, தபால் தொழிலாளர் தலைவர் எஸ். ராமானுஜம், சீதாராம் நாயுடு, எஸ். ஸி. அந்தோணி பிள்ளை, சங்குண்ணி நாயர், ராமச்சந்திரன் ஆகியோர் தபால் தொழிலாளர்களை ஆதரித்தும் சர்க்காரைக் கண்டித்தும் பேசினார்கள்.

## திருச்சியில் 50,000 பேர்

ஜூலை 25ல் திருச்சியில் பரிபூரண ஹர்த்தாலும், பொதுவேலை நிறுத்தமும் நடந்தது. தபால், ஆர். எம். எஸ்., சுருட்டு, கைத்தறி, மோட்டார், முனிசிபல், ரயில்வே, பிரஸ் முதலியவற்றில் வேலை பார்க்கும் தொழிலாளர்களும், செம்பட்டு தோல் பதனிடும் தொழிலாளர், குதிரை, மாட்டு வண்டி தொழிலாளர், வைரத் தொழிலாளர், வர்த்தகத் தொழிலாளர்கள், மாணவர்கள் ஆகிய சகலரும் வேலை நிறுத்தம் செய்தார்கள். சகல கடைகளும் மூடப்பட்டன. ஈப்பூர் மைதானத்தில், திருச்சி ஜில்லா தபால்காரர் சங்க உபதலைவர் தோழர் ஏ. எஸ் கிருஷ்ணமூர்த்தி தலைமையில் 50,000 பேரடங்கிய பொதுக் கூட்டம் நடந்தது. தென்னிந்திய ரயில்வேத் தொழிற் சங்கத் தலைவர், தோழர் எம் கல்யாணசுந்தரம் பேசுகையில் "தபால் தொழிலாளரின் போராட்டம் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டமா யிருப்பதால் சர்வ கட்சி தேச பக்தர்கள் இதில் சேர வேண்டு மென்றார்.

மற்றும் ஸ்ரீ P. பொன்னம்பலக் கவுண்டர், கே. ஏ பி. விஸ்வநாதம், நம்பியார், T. P. வேதாசலம், குப்பன் முதலியோர் பேசினார்கள்.

அன்று மாலையில் நகரில் நாலு பாகங்களிலிருந்தும் அநேக ஊர்வலங்கள் நடந்தன.

## கோவையில் 20,000 பேர்

கோவை மில் தொழிலாளர்கள் புருக்பாண்டு தொழிலாளர்கள், முனிசிபல் தொழிலாளர்கள் உட்பட 12,000 பேர் வேலை நிறுத்தம் செய்தார்கள். நகரின் நாலு பாகங்களிலும் இவர்கள் தபால் தொழிலாளர்களுக்கு ஆதரவான கோஷங்களை முழங்கினார்கள். சகல கடைகளும் மூடப்பட்டன. காலையில் நடந்த பொதுக்கூட்டத்தில் மில் தொழிலாளர் சங்க பொதுக் காரியதரிசியும், அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸின் ஜெனரல் கவுன்ஸில் மெம்பருமான தோழர் K. ரமணி பேசினார்.

அன்று மாலை பிரமாண்டமானதொரு ஊர்வலம் நடைபெற்றது. ஸ்டேடியம் மைதானத்தில் 20,000 பேர்கொண்ட பொதுக் கூட்டம் நடந்தது. கோவை ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி P. K. ராமசாமி தலைமையில் தோழர் P. ராமமூர்த்தி பேசுகையில், "தபால் தொழிலாளர் போராட்டம் நாடு முழுவதும் தொழிலாளி வர்க்கத்திடையே ஏற்பட்டுள்ள கொந்தளிப்பின் அறிகுறியாகுமென்றும், தனது குறைகளைத் தீர்த்துக்கொள்ளும் வரையிலும் நம் வர்க்கம் போராடத் தீர்மானித்துவிட்ட"தென்றும் கூறினார்.

இதுபோன்ற மாபெரும் ஆர்ப்பாட்டங்கள் செங்கொடியின் கீழ் தமிழ் நாடெங்கும் நடைபெறுகின்றன.

போட்டோ: J. M. கல்யாணம்

சென்னையில் ஜூலை 23-ந் தேதி பொது வேலைநிறுத்தம் செய்து திலகர்கட்டத்தில் நடந்த தொழிலாளரின் பிரம்மாண்டமான கூட்டம்

## தலையங்கம்

# தாழ்த்தப்பட்டோர் சத்தியாக்கிரஹம்

பம்பாயில் சட்டசபை கூடிய தினத்தன்று தாழ்த்தப்பட்டோர் சம்மேளனம் சத்தியாக்கிரஹத்தை தொடங்கிற்று. தாழ்த்தப்பட்டோருக்கு "மைனரிட்டி அந்தஸ்து" கொடுத்து, சட்டபூர்வமான பாதுகாப்பு அளிப்பதற்கு பிரிட்டிஷ் தூதுகோஷ்டியினர் மறுத்துவிட்டதனல் இழைக்கப்பட்டிருக்கும் "கொடூர அக்ரமத்தி"ற்கு பரிகாரம் தேடுவதே அவ்வியக்கத்தின் நோக்கம் என்று சம்மேளனத்தின் தலைவர்கள் சொல்கிறார்கள்.

வேலைநிறுத்தம் செய்யும் தொழிலாளர்கள்மீது 144 தடையுத்தரவுபோட்டு, ஸ்ட்ரைக் நடக்கும் வட்டாரங்களிலேயே தொழிலாளர் நுழையமுடியாதபடி தடுத்து, கருங்காலிகளுக்கு பாதுகாப்பு அளிக்கும் பம்பாய் காங்கிரஸ் மந்திரிசபை, அதே சட்டத்தைத் தாழ்த்தப்பட்ட சம்மேளனத்தினர்மீதும் பிரயோகிப்பதில் ஆச்சரியமில்லை. பொதுஜன உரிமைகளை இவ்விதம் காங்கிரஸ் மந்திரிசபை காலில்போட்டு மிதிப்பது கண்டிக்கத்தக்கதாகும்.

சமூகப் பொருளாதாரத் துறைகளில் ஒடுக்கப்பட்ட லக்ஷக்கணக்கான அடிமைகளின் பிரச்னை இன்னும் தீர்க்கப்படவில்லை என்பதையே இந்த சத்தியாக்கிரஹம் காட்டுகிறது.

சமீபகாலத்தில் இந்தப் பிரச்னை அடிதடி கை கலப்புகளாகவும், கொலைகளாகவும் வெளிப்பட்டது. தேர்தல் காலத்தில் தாழ்த்தப்பட்டோர் சம்மேளனத்தினரை படுமோசமாகத் திட்டி தாக்கிய சில பொறுப்பற்ற காங்கிரஸ் தலைவர்களே இந்த அடிதடிகளுக்குக் காரணம்.

இந்த மனக்கசப்பு ஒருபுறம்; தேர்தலில் இந்தியாவெங்கும் தாழ்த்தப்பட்டோர் சம்மேளனத்தின் அபேட்சகர்கள் வெற்றியடையாமல போனது மறுபுறம்; ஜாதி ஹிந்து ஓட்டு பலத்தினல் சம்மேளனத்தின் கோட்டை என்று கருதப்படும் பம்பாயிலும், மத்திய மாகாணத்திலும் சம்மேளனம் தோல்வியடைந்தது இன்னெரு புறம்—இவை யெல்லாம் சேர்ந்து இன்றைக்கு சத்தியாகிரஹ ரூபத்தில் வெளிப்படுகின்றது.

இதில் மிக மிக முக்கியமான விஷயம் ஒன்று இருக்கிறது. இன்றைய கேவல நிலைமையை ஒழித்துக்கட்டி, ஜாதி ஹிந்துக்களின் பொருளாதார ஆதிக்கத்திலிருந்து தாழ்த்தப்பட்ட மக்களை விடுதலை செய்வது என்று தேசிய இயக்கம் திடசங்கல்பம் செய்துகொண்டுவிட்டதென்று எல்லோரும் தெளிவாக உணருவதற்கு எந்தப் பொருளாதார திட்டம் வேண்டுமோ, அந்தப் பொருளாதார திட்டத்தை உருவாக்கி வளர்ப்பதற்கும், அதன் மூலம தாழ்த்தப்பட்டோரின் விடுதலைக்குப் போதிய உத்திரவாதமளிக்கவும் தேசிய இயக்கம் தவறிவிட்டது.

இந்தக் காரணங்களினுல்தான், சம்மேளனத்தின் தலைவர்களுக்கு அம்மக்களிடமிருந்து நிரம்ப ஆதரவு கிடைக்கிறது. ஆனல் அத்தலைவர்களின் அரசியல் அம்மக்களைத் தவருனவழியில் திருப்பிவிடுகிறது. ஏகாதிபத்ய அமைப்பை நிர்மூலமாக்கும் சமூக புரட்சியின் மூலமே தாழ்த்தப்பட்டோர் விடுதலையடைய முடியுமென்பது வெட்டவெளிச்சம். இதைவிட்டு, அம்மக்களுக்கு நியாயம் தேடுவதற்காக ஏகாதிபத்ய பிரிட்டிஷாரின் மீது நம்பிக்கை வைப்பதே அத்தலைவர்களின் அரசியல் கொள்கையாக இருந்துவந்திருக்கிறது.

பிரிட்டிஷார் நம்பிக்கைத் துரோசம் செய்துவிட்டனர் என்று இன்றைக்கு டாக்டர் அம்பேத்கர் கூறுகிறார். பிரிட்டிஷார் தங்கள் சுயநலத்திற்கே சம்மேளனத்தின் தலைவர்களைப் பயன்படுத்திக்கொள்கின்றனர் என்று விழிப்புற்ற தொழிலாளி இயக்கம் தாழ்த்தப்பட்ட மக்களை மீண்டும் மீண்டும் எச்சரித்து வந்திருக்கிறது. பிரிட்டிஷார் மீது நம்பிக்கை வைப்பது தாழ்த்தப்பட்ட மக்களைக் காட்டிக்கொடுப்பது என்று இப்போதாவது அத்தலைவர்கள் உணரவேண்டும்.

பிரிட்டிஷ் திட்டத்திலிருந்தே இன்றைய சத்தியாகிரஹம் தோன்றியிருக்கிறது என்று அத்தலைவர்கள் சொல்கிறார்கள்.

பிரிட்டிஷ் திட்டம் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு மட்டும்தான் தீங்கு விளைவிக்கிறது என்று சொல்வது தவறு. இந்திய மக்கள் அவ்வளவு பேருக்கும் அது தீங்கு செய்கிறது. சகல தொழிலாளி, விவசாயி மக்களையும் சாஸ்வத அடிமைகளாக்கும் சதி அது. ஒடுக்கப்படும் மக்களுக்கு எதிராக ஒடுக்கும் கூட்டத்துடன் பங்காளி உறவை உண்டாக்கிக்கொண்டு, பிரிட்டிஷ் ஆதிக்கத்தை நிலைபெறச்செய்யும் வஞ்சகம் அது.

இதை உண்மையிலேயே எதிர்க்க அத்தலைவர்கள் விரும்பினல் மற்ற தொழிலாளி-விவசாயி மக்களுடன் சேர்ந்து நிற்கவேண்டும். விடாது அதை எதிர்த்துப் போர்புரியும் கம்யூனிஸ்ட் கட்சியுடன் சேர்ந்து நிற்கவேண்டும். தொழிலாளி-விவசாயி போராட்டங்களை ஆதரித்து அத்தலைவர்கள் பலப்படுத்தட்டும். அப்போராட்டங்களிலிருந்து அந்த சதியை முறியடிக்கும் மகத்தான சக்தி உருவாகும்.

உண்மை வேறுவிதமாக இருக்கிறது. அத்திட்டத்தை நிறைவேற்றவும், பிரிட்டிஷாருடன் சமரஸம் செய்துகொள்ளவும் காங்கிரஸ் தலைவர்களைப் போலவே சம்மேளனத்தின் தலைவர்களும் விரும்புகின்றனர். அச்சதிகார திட்டத்தில் தங்களுக்கு "மைனரிட்டி அந்தஸ்து" வேண்டுமென்பதே இன்றைய சத்தியாகிரஹத்தின் நோக்கம். ஆதலின், இத்தகைய சத்தியாக்கிரஹத்திற்கு அச்சதியை முறியடிக்கப் போராடுகிறவர்களின் ஆதரவு கிடைக்காது.

"மைனரிட்டி அந்தஸ்தினுல்" மட்டும் தாழ்த்தப்பட்டோர் பிரச்னை தீராது. காங்கிரஸ் திட்டமாகட்டும், சுதந்திரப் போரில் சேர மறுக்கும் சம்மேளனத்தின் திட்டமாகட்டும், லக்ஷக்கணக்கான ஒடுக்கப்பட்டோருக்கு விடுதலை கிடைப்பதில் கொண்டுபோய் விடாது.

சட்டசபைகளில் போதிய அளவு பிரதிநிதித்துவமும், இது போன்ற உடனடியான உரிமைகளும், வசதிகளும் தாழ்த்தப்பட்டோருக்கு உடனடியாக கிடைக்கவேண்டுமென்று எவ்வளவு உறுதியுடன் கம்யூனிஸ்டுக்கட்சி இப்போது கூறுகிறதோ, அதேபோல், பிரிட்டிஷ் ஆதிக்க வகுப்பாரையும், இன்றைய பிரிட்டிஷ் திட்டத்தையும், சமூக அமைப்பையும் வீழ்த்தத் தொழிலாளி விவசாயி மக்கள் ஒன்று சேர்ந்து நடத்தும் மகத்தானப் போராட்டத்தின் மூலமே லக்ஷோபலக்ஷ தாழ்த்தப்பட்டோருக்கு இறுதியான விடுதலை கிடைக்கும் என்று கம்யூனிஸ்டு கட்சி திடமாக நம்புகிறது.

அத்தகையப் போராட்டம் சமத்துவ உரிமைகளையும் நிலங்களையும் தாழ்த்தப்பட்டோருக்கு அளிக்கும்.

இறுதி விமோசனத்திற்கு இப்பாதையில்தான் தாழ்த்தப்பட்டோர் இயக்கம் முன்னேறவேண்டும்.

# ஆகஸ்ட் 9-ம் தேதி

ஆகஸ்ட் 9-ந்தேதி வரப்போகிறது! தேசிய இயக்கத்தின் சரித்திரத்திலே அந்தத் தேதி ஒரு மிக முக்கியமான மைல் கல்லாகும். பூர்ண தேசிய சுதந்திரத்தையும், இடைக்காலத்தில் தேசியப் பாதுகாப்புக்காக தேசிய சர்க்கார் வேண்டுமென்றும் காங்கிரஸ் மகாசபை கோரிய போதிலும், காங்கிரஸ்—லீக் விரோதங்களை தனக்கு சாதகமாக பயன்படுத்திக் கொண்டு தேசிய இயக்கத்தை நசுக்கிவிட ஏகாதிபத்தியம் பாணம் தொடுத்த நாள் அந்த நாள்! தேச மக்களுக்கு ஆத்திரமூட்டி விட்டு நாட்டை ஜப்பானிய ஆக்ரமிப்பு ஆபத்துக்கு உள்ளாக்கியது ஏகாதிபத்தியம். ஆவேசமூண்ட தேசபக்தர்களும் ஏகாதிபத்தியத்தை பழிவாங்கவேண்டுமென்ற துடிப்பில் நாட்டின் பாதுகாப்பைக் குலைக்கும் நாசவேலைகளில் இறங்கினர். ஏகாதிபத்தியத்தின் கையிலிருந்து ஜப்பானிய பாசிஸ்டுகளின் கைக்கு இந்தியா மாறுவதா என்ற கேள்வி எழுந்தது மகத்தான தேசிய நெருக்கடி என்று அன்றைய நிலைமையை வர்ணித்தோம்.

இன்று அந்த தேசிய அரசியல் நெருக்கடி மிகவும் அபாயகரமான கட்டத்தை எட்டிவிட்டது. ஏகாதிபத்தியத்தை எதிர்க்க, காங்கிரஸ் லீக் தலைமைகள் தேசிய ஒற்றுமை ஒன்றேதான் ஆயுதம் என்று அன்று பார்க்காதது போலவே இன்றும் பார்க்காமல், பரஸ்பர சகோதரச் சண்டைகளை வளர்த்து விட்டுக்கொண்டு, ஏகாதிபத்தியத்தினிடம் லகானை கொடுத்துவிட்டதனல், தீர்ப்புகளுக்கு மேல் தீர்ப்புகளை தலைமேற் சுமந்து, பிரிட்டிஷ் சர்க்காரின் அடிமைச் சாஸனத்தை இருதேசியத் தலைமைகளும் ஏற்கும் நிலைமை நாட்டில் ஏற்பட்டிருக்கிறது.

காங்கிரஸ்-லீக் விரோதங்களும், கம்யூனிஸ்டு எதிர்ப்பு பிளவுகளும் சேர்ந்து ஏகாதிபத்தியத்தையும், முதலாளித்துவத்தையும் இந்நாட்டில் பலம்பெறச் செய்து வருகின்றன. ஏகாதிபத்தியத்தின்மீது நம்பிக்கை, மன்னர்களின்மீது நம்பிக்கை, வகுப்பு வாதிகளின்மீது நம்பிக்கை, பண மூட்டைகளின்மீது நம்பிக்கை ஒருபுறம் காங்கிரஸ்—லீக் தலைமைகளின் போக்காகிவிட்டது. மறுபுறமோ, தொழிலாளி விவசாயி போராட்டங்களுக்கும், சமஸ்தானப் போராட்டங்களுககும், ஏகாதிபத்திய எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களுக்கும் ஆதரவுதராமை—ஏன்? எதிர்ப்பதுங்கூட—கொள்கையாகி வருகிறது.

சுதந்திர உணர்ச்சியோடுகூட பஞ்சம், பட்டினி, வேலையின்மை, சம்பளம் போதாமைபோன்ற பிரச்சினைகளால் உந்தப்பட்டு போர்ப்பாதையில் தொழிலாளி விவசாயிகள்மட்டுமன்றி, மத்தியதர வகுப்பாரும் செல்கின்றனர்.

ஆகஸ்ட் 9 இந்தக் கட்டத்தில்தான் வருகிறது! நான்கு வருடங்களுக்கு முன் இந்த தினத்தில் ஏகாதிபத்தியத்தால் சிருஷ்டிக்கப்பட்ட தேசிய நெருக்கடியை, இந்த வருடத்தில் ஒரு முடிவுக்குக் கொண்டுவர இதே தினத்தில் முழு சக்தியுடன் முனைவோம்!

பிரிட்டிஷ் அடிமைச் சாஸனத்தை நிராகரிக்கவேண்டும்! பூர்ண சுதந்திர உரிமை உடனே அங்கீகரிக்க வேண்டும்! சர்வ அரசியல் அதிகாரமும் அரசியல் நிர்ணய சபைக்கே! மன்னர்கள் ஆட்சி ஒழிக! சமஸ்தான குடி ஆட்சி ஓங்குக! தொழிலாளி விவசாயி போராட்டங்கள் வெற்றி பெறுக! கள்ள மார்க்கெட்டை ஒழிப்போம்! என்ற சுதந்திரத்திற்கான, ஜனநாயகத்திற்கான, சுபிட்சத்திற்கான சுலோகங்கள் அன்று ஒலியும், எதிரொலியுமாகக் கேட்கவேண்டும்.

ஆகஸ்ட் 9-ந் தேதியன்று கம்யூனிஸ்டுக் கட்சியின் சார்பில் தமிழ்நாடெங்கும் ஆகஸ்ட் 9 லிருந்து 16-ந் தேதி முடிய "பூர்ண சுதந்திர வாரம்" கொண்டாட வேண்டும். ஏழு நாட்களையும் பின்வரும் ரீதியில் கொண்டாடுக:

9-ந் தேதி பிரிட்டிஷ் திட்டம் ஒழிக! இந்திய சுதந்திர திட்டத்துக்கு போராடுங்கள்!

10-வ சமஸ்தான மக்கள் போர் வெல்க!

11-வ தொழிலாளி விவசாயி பொது ஜனங்களின் போராட்டம் வெற்றியடைக!

12-வ தென் ஆப்பிரிக்கா, சிலோன் மலேயா, இந்தியர்கள் வாழ்க!

13-வ நூல், துணி, உணவு, கள்ள மார்க்கெட்டைப் பிடியுங்கள்!

14-வ உணவுப் பஞ்சம் ஒழிக!

15-வ பிரஜா உரிமைகள் வேண்டும் ஜனசக்தியை தினசரியாக்குக!

16-வ தேசிய ஒற்றுமை ஓங்குக.

ஆகஸ்ட் 9ந்தேதி வாரத்தை பிரம்மாண்டமான தேச பக்த அணி வகுப்புகளாக நடத்துங்கள்!

M. R. வெங்கட்ராமன்
காரியதரிசி தமிழ்நாடு கமிட்டி
கம்யூனிஸ்ட் கட்சி.

## சேலத்தில் தாக்குதல்

சேலம் மாங்னிசைட் தொழிலாளரின் வேலை நிறுத்தத்தை உடைப்பதற்கு, கருங்காலிகளைக் கண்ட்ராக்டர் கொண்டு சென்றபோது, அமைதியாக மறியல் செய்த தொழிலாளர்களை மிகவும் கடுமையாகக் கண்ட்ராக்டர்கள் தாக்கிப் புடைத்த தோடல்லாமல், ஐந்து தொழிலாளர்களை திமிர்பிடித்த கண்ட்ராக்டர் ஒருவன் துப்பாக்கியால் சுட்டுவிட்டான். படுகாயமுற்று வீழ்ந்த இந்த ஐந்து தொழிலாளர்களையும், யூனியன் காரியதரிசி தோழர் எஸ். எம். ராமையாவையும் போலீஸார் கைது செய்திருக்கின்றனர்.

இந்தப் படுபாதகத்தை விசாரணை செய்து குற்றவாளிகளை தண்டிக்கும்படியும், கைது செய்யப்பட்ட தோழர்களை விடுதலை செய்யும்படியும் ஊரெங்கும் கூட்டங்களைக் கூட்டி கிளர்ச்சி செய்யுங்கள்.

* * *

## ரயில்வேயில் தாக்குதல்

பொன்மலை ஒர்க்ஷாப் தொழிலாளர் 5 ஆயிரம் பேர் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்துவருகின்றனர். கடந்த இரண்டு மாத காலமாக ரயில்வே நிர்வாகம் செய்துவரும் அடக்குமுறையும், பயங்கர ஆட்சியும்தான் காரணம். சில மாதங்களுக்கு முன்பு யூனியன் ஊழியர்

(7-ம் பக்கம் பார்க்க)

# கள்ள மார்க்கெட் மீது

# பொதுஜன யுத்தம்!

கள்ள மார்க்கெட்டில் நுழையாத பண்டம் இன்று ஏதாவது ஒன்று உண்டா? இல்லை. அதிகாரிகள் எத்தனை கள்ளமார்க்கெட்டுகள் பிடித்திருக்கிறார்கள்? ஏன் பிடிக்கவில்லை? காரணம் எல்லோருக்கும் தெரியும். போலீஸ்காரர்கள் எத்தனை கள்ள மார்க்கெட்டுகளை விட்டு வைக்கிறார்கள் என்று கணக்கு நம்மால் சொல்ல முடியாது. அந்தந்த நகரத்தில் கிராமத்தில் உள்ள மக்களுக்குத் தெரியும்! எல்லாம் 'வெள்ளையப்பன்'' வேலை என்பதை அறியாதவர் இல்லை. நிலைமை இப்படி இருந்தும் நம் தோழர்களும் பொதுமக்களும் இதைப் பார்த்துக் கொண்டு தூங்கவில்லை. ஆயிரக்கணக்கில் கள்ள மார்க்கெட்டை மெய்யுமாக பிடித்திருக்கின்றனர்.

### உணவில் கள்ளமார்க்கெட்

பொள்ளாச்சியில் "பிரபலஸ்தர்" A.T.S. சின்னசாமிசெட்டியார். இவர் காங்கிரஸ் கவுன்ஸிலர். நாலு ஜின்னிங் பாக்டரிக்கு சொந்தக்காரர். பஞ்சு பருத்தி நிலக்கடலையில் பெரும் வியாபாரி. இதில் கிடைக்கும் 'வருமானம்' அவருக்கு கட்டவில்லை போலும்! அரிசியாலும் கள்ளமார்க்கெட் வியாபாரம் நடத்த இறங்கினார். ராஜாமில் வட்டாரத்திலுள்ள ஹோட்டல்கள், இட்லிக்காக புழுங்கல் அரிசியை ரூபாயிக்கு பட்டணம் படியால் முக்காலே அரைக்கால் படி வீதம் வாங்கிவந்த விஷயம் நம் தோழர்களுக்குக் கிடைத்தது. இதை கண்டுபிடிப்பதில் நம் தோழர்கள் முனைந்தனர். 10-7-46-ல் பச்சை நிறம் பூசிய 'பிளசர்' காரில் இரண்டு பெரிய மூட்டையில் அரிசி இரவு 10½ மணிக்கு இவர் வீட்டில் வந்து இறங்கியது. ரேஷன் ஆபீஸருக்கு உடனே அறிவித்து 11½ மணிக்கு வீட்டை சோதனையிட்டதில் 1½ மூட்டை அரிசியிருந்தது. தன் குற்றத்தை ஒத்துக்கொண்டு, ஊரில் அம்பலப்படுத்த வேண்டாமென்று கேட்டுக்கொண்டு அரிசியை ரேஷன் ஆபீசுக்கு அனுப்பி வைத்தார். ஆனால் மறுநாள் காலை, தான் ரேஷன் அரிசியில் மீதம் செய்தது என்று ஸ்டேட்மெண்ட் கொடுத்திருக்கிறார். நமது தோழர்கள், ரேஷன் ஷாப்பில் ஒரே அரிசி கொடுக்கப்படுவதில்லை என்றும், பிடிபட்ட அரிசி ஒரே ரகமானது என்றும், மற்றும் வேண்டிய ஆதாரங்களுடன் எந்தக் கோர்ட்டிலும் சாட்சியம் கொடுப்பதாகவும் ஸ்டேட்மெண்ட் கொடுத்திருக்கின்றனர். ஆனால் அதைப்பற்றிய நடவடிக்கை எதுவும் இதுவரை எடுத்துக்கொள்ளப்படவில்லை.

மதுரையில் M. S. S. மணி அரசாங்கத்துக்கு ஒரு அறிக்கை விட்டிருக்கிறார். ஜில்லா கலெக்டரைக் கண்டு பேசியிருக்கிறார். அதில் மதுரையை அடுத்து சில மைல்களுக்குள் உள்ள சுமார் 13 கிராமங்களில் மட்டும் பதுக்கி வைக்கப்பட்டிருக்கும் தானியத்தின் அளவையும் வைத்திருக்கும் நபர்களின் பெயரையும், வைத்திருக்குமிடத்தையும் குறிப்பிட்டு நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும், அதற்கு வேண்டிய மேல்கொண்ட தகவல்களையும் உதவியையும் கொடுப்பதாகவும் கூறியிருக்கிறார்.

13 கிராமங்களில் சுமார் 38 பேரிடம் மட்டும் சுமார் 6000 மூட்டை தானியம் பதுக்கி வைக்கப்பட்டிருப்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார். அது விஷயமாக இன்னும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டதாக இதுவரை நமக்குத் தகவலில்லை.

### நூல்

மதுரை T. C. O. ஆபீஸில் (நூல் கண்ட்ரோல் ஆபீஸர்) மாஜிதலைமை குமாஸ்தாவாக இருந்த ஹம்ஸா ராவுத்தராலும் காதர் ராவுத்தராலும் கள்ளமார்க்கெட் விற்பனைக்காக பதுக்கி வைக்கப்பட்டிருந்த மகாலக்ஷ்மி மில்—40 நெ. நூல் 400 ராத்தல்கொண்ட பேல்கள் 5ம், கட்டுகள் 6ம் நம் தோழர்களால் 17-7-46 அதிகாலை 3½ மணிக்கு பிடிபட்டது. இவர்கள் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். இதே காலத்தில் நெசவாளிகளுக்கு போன மாதத்தில் கொடுக்கவேண்டிய ரேஷன் இன்னும் கொடுக்கப்படவில்லை. ஆனால் கள்ளமார்க்கெட்டில் 40 நெ. நூல் 5 ராத்தல் கட்டு 80 ரூபாயுக்கு விற்கப்படுகிறது. அதன் கண்ட்ரோல் விலை ரூ 24¼ தான்.

திருவண்ணாமலையில் கள்ளமார்க்கெட்காரர், மண்ணுங்கட்டி பிள்ளை என்பவரால் திருக்கோவிலூர் ஜவுளி வியாபாரி டி. எஸ். பட்டாபி செட்டியாருக்கு லைசன்ஸ் இல்லாமலும் பில் இல்லாமலும் காடா கெஜம் 8 கொண்ட சேலை 25ம், 2 கலர் பீஸ்களும், மில் சீட்டி கெஜம் 10ம் விற்றதை நடுத்தெருவில் தோழர் ஆர். தெய்வசிகாமணியும், டவுன் காங்கிரஸ் கமிட்டி மெம்பர் முத்துசாமி பிள்ளையும் பிடித்து ஸப்இன்ஸ்பெக்டரிடம் ஒப்படைத்தனர். ஆனால் ஸப் இன்ஸ்பெக்டர் இது விஷயம் என்ன செய்திருக்கிறார் என்பதை அவரைக் கேட்டால்தான் தெரியும்.

சென்னையில் கேட்கவேண்டுமா? முழு மோசடி! 19-6-46ம் தேதி சென்னையிலிருந்து கிளம்பின பண்டிட் என்ற கப்பலில் கொடுத்த கோட்டாவுக்குமேற்பட்ட துணியை வியாபாரி அனுப்பவிருப்பதை முன் கூட்டியே தெரிவித்தும், மாகாண நூல் கண்ட்ரோல் டிபார்ட்மெண்ட் அதிகாரிகளின் கையாலாகாத்தனத்தால் அது பிடிபடாமலே நழுவி விட்டது.

21-6-46ல் குவேட்டா என்ற கப்பலில் அனுப்பவிருந்த பர்மிட்டுக்கு மேல் அதிகமாக துணிகள்கொண்ட பேல்கள் பிடிபட்டன. துறைமுகத்துக்கு போவதற்குமுன்பே, அவைகள் இருக்குமிடத்தையும் மற்ற முழு விபரங்களை மாகாண தொழிற்சங்க காரியதரிசி பாலசந்திரமேனன் கண்ட்ரோல் ஆபீஸருக்கு அறிவித்தார்.

துறைமுகத்தில் 15 பேல்களும், ரயில்வே ஸ்டேஷனில் 49 பேல்களும், ஆகமொத்தம் 63 பேல்கள் பிடிபட்டன. அதன் சொந்தக்காரர்களின் முன்னிலையில் அவைகளை உடைத்து பரிசீலனை செய்ததில் கொடுக்கப்பட்ட பர்மிட் அளவுக்கு மேல் 3 மடங்கு துணி இருந்தது. இந்த துணி கல்கத்தாவுக்கும் அமிர்தசரஸிற்கும் ஏற்றுமதியாக வேண்டியிருந்தவை.

பிடிபட்ட பேல்களில் 18 பேல்கள் கன்னனூர் உமையாள் வீவிங் எஸ்டாபிளிஷ்மெண்ட் கம்பெனிக்குச் சொந்தம். இந்தக் கம்பெனியின் சொந்தக்காரர் கோடைவள்ளல் டாக்டர் அளகப்ப செட்டியார் (பாரிஸ்டர் [illegible] கெ. 6267 [illegible] 1,000 கெஜ [illegible] மட்டும் அ[illegible]றது. ஆனல் [illegible] அனுப்பிய 9 பேலில் மட்டும் 9,000 கெஜம் இருக்கவேண்டியிருக்க, 35,000 கெஜம் துணிகள் இருந்தன. அமிர்தசரஸுக்கு அனுப்பியுள்ள மற்ற 9 பேலில் 28000 கெஜத்திற்கு மேற்பட்ட துணிகள் இருந்தன. இவ்வளவு கைத்தறி துணியும் நம் மக்களை நிர்வாணமாக்கி எல்லாவித சட்ட வரம்பையும் மீறி அனுப்பியிருந்த கள்ளமார்க்கெட் சதிகாரச் சூழ்ச்சியாகும்.

இதுமட்டுமல்ல. கம்பெனிக்கு கொடுக்கப்பட்ட பர்மிட் இரண்டில் ஒன்றை எஸ். எஸ். இப்ராஹிம் அண்டு கம்பெனி (தம்பு செட்டி தெரு) க்கு கெஜ மணிக்கு 3½ அணா வீதமும், மற்றொன்றை செம்புதாஸ் தெருவிலுள்ள கோதரிநாத் கம்பெனியாருக்கு கெஜம் ஒன்று 4 அணா வீதமும் விற்றிருக்கின்றனர். இதற்குப் போதிய ருசுவிருந்தும் எவ்வித நடவடிக்கையும் இதுவரை எடுத்ததாகத் தெரியவில்லை. நம் தோழர்கள் 1½ மாதம் முட்டி மோதிக்கொண்ட பிறகே அதிகாரிகளும் இது விஷயத்தில் தலையிட்டிருக்கிறார்கள்.

ஆனால், இதைப் பிடிக்கும் பொதுஜன ஊழியர்களுக்கு கிடைக்கும் வெகுமானம் என்ன தெரியுமா? 21-5-46-ந்தேதி கள்ள மார்க்கெட்டில் பீஸ் துணி ஒன்றை கடத்திச் சென்ற நபர் ஒருவரை பொள்ளாச்சியில் இரு தோழர்கள் பிடித்து 243 நெ. போலீஸ்காரரிடம் ஒப்படைத்தனர். அந்த யோக்கியன் பணத்தை லஞ்சம் வாங்கிக்கொண்டு கள்ள மார்க்கெட் காரனை நழுவவிட முயற்சி செய்தான். நமது தோழர்கள் அதை அனுமதிக்காததற்காக அந்தக் குட்டி ஹிட்லர் நமது தோழர்களை அதே இடத்தில் செருப்பாலடித்து, மண்டையில் காயமும் படுத்திச் சென்றான். அது விஷயமாக போலீஸ் உத்தியோகஸ்தர்களுக்கும், மந்திரிகளுக்கும் மகஜர் அனுப்பியும் இதுவரை எவ்வித பலனுமில்லை.

இந்த அதிகாரிகளின் ஊழலும், போலீசின் லஞ்சமும், கள்ள மார்க்கெட் கையாட்களின் தாண்டவமும் நிறுத்தப்படவேண்டும். பொதுமக்களும், ஊழியர்களும் இன்னும் தீவிரமாக இவ்வேலைகளில் இறங்க வேண்டும்.

—J. M. கல்யாணம்

ஒட்டன்சத்திரம்

## பஞ்ச எதிர்ப்புப் போராட்டம்

## ஒரு வெற்றி

ஒட்டன் சத்திரத்தில் பஞ்ச நிலைமை பரவிவந்தது. அதிகாரிகளுக்கு நிலைமை விளங்காமல் போனதைப்பற்றி நாம் ஆச்சர்யப்படவில்லை. ஆனால் காங்கிரஸ்—லீக் பிரமுகர்களுக்கு ஏனோ இந்த நிலைமை விளங்காமல் போய்விட்டது. உணவுக் கமிட்டி உத்யோக வேட்டையில், முழு கவனமும் இருந்து வந்தது. விவசாய சங்கம் மட்டுமே இக்கொடூரமான பஞ்ச நிலைமையை கண்டது.

விவசாயிகளை ஒன்று சேர்த்து சுமார் 25 மைலுக்கு அப்பாலுள்ள திண்டுக்கல்லுக்கு ஊர்வலமாக, ஒரு பட்டினிப் பட்டாளத்தை நடத்துவது என விவசாய சங்கம் முடிவு செய்தது.

இதை விளக்கி சுற்றிலுமுள்ள 60 கிராமங்களில் 8 ஸ்குவாடுகள் நோட்டீஸ்கள்மூலமும் விளக்கப் பிரசார மூலமும் விரிந்த அளவில் மக்களை திரட்டியது.

இதைக்கண்டு அதிகாரவர்க்கம் நடுங்கியது. சில காங்கிரஸ்காரர்கள் போலீஸ் தலையிடுமென பயந்தனர். ஆனால் பொதுமக்கள் உயிரையும் கொடுக்கத் தயாராயினர்.

விவசாயிகள் ஊர்வலத்திற்காக சுரைக் குடுக்கையும் சோளக் கூழும் தயாரித்து விட்டனர். சுமார் 2000 பேர் கிளம்ப சித்தமாயினர்.

(1) உடனே ரேஷன் வேண்டும், (2) கார்டு இல்லாதவர்களுக்கு கார்டு (3) கள்ளமார்க்கெட்டை பிடி, (4) சேமிப்பாளனை ஒழி என்ற நாலு பிரதான கோஷங்களில் இவ்விவசாயிகள் திரட்டப்பட்டனர்.

தூங்கிக்கொண்டிருந்த அதிகாரவர்க்கத்துக்கு நிலைமை உறைக்க ஆரம்பித்தது. 14-7-46ல் மதுரை ஜில்லா கண்ட்ரோலர் ஜனாப் அப்துல் அஜீஸ், பழனி தாசில்தார் அய்ய நாடார் இன்னும் சில அதிகாரிகளும் தங்கள் கார்களில் ஒட்[illegible]த்திற்கு விரைந்தனர். [illegible]திகளுடன் பேச்சு[illegible]. அதிகாரிகளின் [illegible] ஏற்பட்ட நிலை [illegible]ட்டினர் விவசாயிகள் பிரதிநிதி. இதன்பலனை விவசாயிகள் வெற்றி பெற்றனர். உத்தியோகஸ்தர்கள் கீழ்க்கண்ட ஒப்பந்தத்தை ஏற்றுக்கொண்டனர்.

1. உடனே ரேஷனை அமுலுக்கு கொண்டுவருவது, அதற்கு முன் அத்தாட்சியாக 3000 மூட்டை அரிசியோ, தானியமோ, மாவோ உடனே கொடுப்பது.

2. ஒட்டன்சத்திரத்தில் ராமராஜு தலைமையில் நடைபெறும் விவசாய சங்க கூட்டத்தில் தாசில்தார் தான் செய்யப்போகும் நடவடிக்கைகளையும், ஏற்றுக் கொண்ட ஒப்பந்தத்தையும் விளக்கிப் பேசுவது.

3. கார்டு இல்லாதவர்களுக்கு கார்டு.

4. கள்ளமார்க்கெட், சேமிப்பை பிடித்து உடனே நடவடிக்கை எடுப்பது.

15-7-46ல் ராமானுஜம் தலைமையில் நடந்த கூட்டத்தில் வந்திருந்த 2000 விவசாயிகளுக்கும், சுமார் 400 பெண்களுக்கும், தான் என்ன செய்யப் போகிறார் என்பதை விளக்கி தாசில்தார் பேசினார். அதைத் தொடர்ந்து உணவு வினியோகம் நடைபெறுகிறது. ரேஷன் கார்டு இல்லாதவர்களின் கணக்கை விவசாய சங்கத் தோழர்கள் கணக்கெடுத்து வருகின்றனர்.

நாணம்பட்டியில் 12 மூட்டை சோளத்தையும். அத்திக்கோம்மையில் முறையே 6 மூட்டை, 7 மூட்டை சேமித்து வைத்திருந்தவர்களையும் சங்க ஊழியர்கள் பிடித்தனர். மேலும் கள்ளமார்க்கெட் நடத்தின 5 பேர் கைது செய்யப்பட்டனர். இது பொதுஜன வெற்றி. பஞ்சத்தைக் கொல்லும் மார்க்கத்தை விவசாயிகள் கண்டு கொண்டனர்.

இதுபோன்ற திட்டவட்டமான கிளர்ச்சி எங்கும் பரவினால் மட்டுமே பஞ்சத் தீயை அணைக்க முடியும்.

# தேசம் எங்கே செல்கிறது?

## சீரழிவை தடுப்போம்!

இஸ்மத் பாஷா

*பிரிட்டிஷ் திட்டம் இந்திய சுதந்திர இயக்கத்தைச் சுக்கு நூறாக உடைத்தெறிவதையே நோக்கமாகக் கொண்டது; அதன் வலையில் சிக்கினால் நம் சுதந்திர இயக்கம் சீரழிந்து, தேசமக்கள் சொல்லொணா துயரத்திற்குள்ளாவார்கள் என்று கம்யூனிஸ்டுகளாகிய நாம் ஆரம்பம் முதல் கூறிவருகிறோம்.*

*இது முற்றிலும் உண்மை என்பதை பார்லிமெண்டில் பிரிட்டிஷ் மந்திரிகள் செய்த பிரசங்கங்களும், இன்று தேசத்தில் பல்வேறு பாகங்களிலும் நாம் காணும் காட்சிகளும் நிரூபிக்கின்றன.*

பிரிட்டிஷ் தொழிற்கட்சி சர்க்கார் நமக்கு சுதந்திரத்தையா கொடுக்க முன்வந்தது?

“1942-ம் வருடத்தில் நாம் எதைக் கொடுப்பதாகக் கூறினோமோ, அதைவிட எள்ளளவுகூட அதிகமாக இந்தத்தடவைக் கொடுக்க இசையவில்லை” என்று தூதகோஷ்டியைச் சேர்ந்த அலெக்ஸாண்டர், சர்ச்சிலுக்கு பதில் கூறும்போது குட்டை உடைத்துவிட்டார்.

“சுதந்திரம் தருவதாக நீங்கள் கூறினீர்களே” என்று சர்ச்சில் கேட்டபோது, “1942-ம் வருடத்தில் எப்படி நாம் இந்தியர்களை அணுகினோமோ, அதேபோல் இப்போதும் அணுகியிருந்தால், வெறுங் கையுடன்தான் திரும்பி வந்திருப்போம்” என்று அலெக்ஸாண்டர் பதில் சொன்னார்.

அதாவது, 1942-ல் பரிபூரண சுதந்திரம் தரமுடியாது; கிரிப்ஸ் திட்டத்தைத்தான் தரமுடியும் என்றார்கள். இப்போது பரிபூரண சுதந்திரம் தருகிறோம் என்றார்கள். ஆனால் 1942-ல் தருவதாகச் சொன்னதற்கும், இன்றைக்குக் கொடுத்திருப்பதற்கும் வார்த்தையைத் தவிர விஷயத்தில் வித்தியாசமில்லை என்பதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். 1942-ம் வருட நிலைமையைவிட 1946-ம் வருட நிலைமை முற்றிலும் மாறுபட்டதாக இருந்ததினாலேயே “பரிபூரண சுதந்திரம்” என்று சொல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டது என்பதே இதற்கு அர்த்தம்.

கிரிப்ஸ் கூறுகிறார் கேளுங்கள்: “1942 லோ 1939 லோ இருந்த நிலைமைக்கு முற்றிலும் மாறுபட்ட நிலைமை 1946-ம் வருட தொடக்கத்தில் இந்தியாவில் நிலவிற்று என்பதை இங்குள்ள பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் அறிவார்கள். உலகமெங்கும் யுத்தத்தினால் ஏற்பட்ட அரசியல் விழிப்பில் இந்தியாவும் முழு பங்கு எடுத்துக்கொண்டிருந்தது. தூரக்கிழக்கு நாடுகளில் இந்தியாவில் காணப்பட்ட அரசியல் விழிப்பைப் போல், எந்த நாடுகளிலும் அவ்வளவு அதிகமாக இல்லை என்றுகூட சொல்லலாம். யுத்தத்திற்கு முன்பும், யுத்தத்தின் போதும் போதிய அளவு தென்பட்ட (நம்மை) நெருக்கும் சக்திகள், இப்போது மகத்தானவையாக வளர்ந்துவிட்டன” என்று கூறுகிறார்.

அதாவது, இந்திய சுதந்திர இயக்கம் ஏகாதிபத்தியத்தை வீழ்த்தக்கூடிய அளவு பலமடைந்துவிட்டது என்பதே இதற்கு அர்த்தம். ஆதலின் “பரிபூரண சுதந்திரம் தருகிறோம்” என்று கூறிக்கொண்டு இந்தியர்களை அணுகாவிட்டால், “நமக்கு வெற்றியடைய சந்தர்ப்பமே இல்லை” என்று சொல்கிறார்.

இதைத்தான் கம்யூனிஸ்டுகள் ஆரம்பம் முதல் கூறி வருகின்றனர். “தன்னுடைய பலஹீனத்தை பலமாக மாற்றிக்கொள்வதும், நம் பலத்தை பலஹீனமாக்குவதும் தான் டில்லியில் ஏகாதிபத்தியவாதிகள் நடத்தும் நாடகத்தின் நோக்கம்” என்று பி. ஸி. ஜோஷி கூறினார். “பரிபூரண சுதந்திரம்” என்று அவர்கள் கூறுவது பித்தலாட்டம் என்றோம்.

எப்படி அவர்கள் நம் சுதந்திர இயக்கத்தை பலஹீனப்படுத்தினர்?

மாகாண சட்டசபைகளுக்கு தேர்தலை நடத்தச் செய்து, அது உச்ச நிலையில் இருக்கும்போது அவர்கள் டில்லிக்கு வந்தார்கள். அதன் மூலம் பிப்ரவரி மாதத்திலிருந்த ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்ட அலைகள் தணியும்படியும், சகோதரர்களுக்குள் தேர்தல் இயக்கத்தின்போது சண்டை நடக்கும்படியும் செய்தனர்.

“ஒரு இந்தியாவா, இரண்டு இந்தியாக்களா” என்ற பிரச்னையை வைத்துக்கொண்டு இரண்டு கட்சிகளும் தேர்தலில் மிகவும் உக்கிரமாகப் போராடின. காங்கிரசும், லீகும் தத்தம் தொகுதிகளில் முழு வெற்றிகளை அடைந்தன. இரண்டு கட்சிகளுக்கும் ஏற்பட்ட இந்த குறிப்பிடத்தக்க வெற்றி, பிரச்னையை மிகவும் சுலபமாக்கிவிட்டது. சிறிய கட்சிகள் பின்னணியில் தள்ளப்பட்டு, ஒன்றுக்கொன்று நேர் மாறான கொள்கைகளைக் கொண்ட பெரிய கட்சிகள் முன்னைவிட அதிக பலத்துடன் வந்தன” என்று கிரிப்ஸ் கூறுகிறார்.

பிப்ரவரிமாதத்தில் ஒன்றுசேர்ந்து நின்ற ஹிந்து முஸ்லிம் மக்களை இவ்விதம் பிரித்துப் பிளவுபடுத்தியது, அவர்களுடைய காரியத்திற்கு சாதகமாக இருந்ததாம்!

டில்லியில் அவர்கள் தனித்தனியாகத் தலைவர்களைக் கூப்பிட்டு பேசியதையும் ஒருவருக்கு ஒரு வாக்குறுதியும், இன்னொருவருக்கு வேறு ஒரு வாக்குறுதியும் கொடுத்ததையும், நான்கு மாதகாலம் நாம் பார்த்தபோது, ஜனங்களிடையே வேற்றுமை வளர்ந்து வந்ததைப் பார்த்தோம்.

ஏகாதிபத்யத்தை ஒழித்துக் கட்டுவதற்கு கச்சையை வரிந்துகட்டிய பல்வேறு ஜனங்களும், இன்று ஏகாதிபத்யத் திட்டத்தை “சுதந்திரம்” என்று கருதி, அதில் சரியான “பங்கு” பெறுவதற்காக ஒருவரையொருவர் எதிர்த்து நிற்கத் தொடங்கி விட்டனர்.

இதைத்தான் லார்டு பெத்திக்லாரன்ஸ் தாங்கள் சாதித்த மகத்தான வெற்றி என்று பார்லிமெண்டில் குதூகலத்துடன் கூறுகிறார். “பிரிட்டிஷார் நேர்மையானவர்கள் என்று இந்தியர்களை நம்பும்படி செய்வதுதான் தூது கோஷ்டியின் முதல் வேலையாக இருந்தது... இந்த வேலையில் நாங்கள் முழுக்க முழுக்க வெற்றியடைந்தோம்” என்று பெத்திக்லாரன்ஸ் கூறியபோது, பார்லிமெண்டில் கரகோஷம் எழுந்தது! பிரிட்டிஷாரின் நேர்மையை இந்தியர்கள் நம்புவதனால்தானே, இப்போது ஒருவர் சிண்டை ஒருவர் பிடித்து… நிற்கிறார்கள்?

“இரண்டு … கிடையிலும் இ… களை போக்கி… அவர்களுடைய இரண்டாவது வேலை யென்று பெத்திக்லாரன்ஸ் கூறினார். அதில் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றனர்?

“சமஸ்தானாதிபதிகள் ஒத்துக் கொள்ளும்படியான அம்சங்களைக் கொண்ட ஒருஒப்பந்தத்தை இரண்டு கட்சிகளுக்கிடையிலும் நாங்கள் பேசி முடித்தோம். புதிய சட்டதிட்டங்களை வகுப்பதற்கு வேண்டிய சாதனத்தை இது அளிக்கிறது. அந்த சாதனத்தை (அரசியல் நிர்ணய சபை) வேலை செய்ய வைப்பது அல்ல எங்கள் பேச்சுகள். நம்மை அழைத்தால் உதவி செய்வதற்கு ஆவலுடன் தயாராக நாம் ஒதுங்கி நிற்க வேண்டும்.

……………………சட்ட திட்டங்களை வகுக்கும் பாதை சுலபமானது என்று நினைக்க யாரும் முட்டாள்களல்ல இப்போது உடும்புப் பிடியாக பிடித்துக்கொண்டிருக்கும் கொள்கைகளைப் பிரதான கட்சிகள் விட்டுக்கொடுத்துவிடாது ………… தம்தம் கட்சியை சேராதவர்கள் உள்பட, பல சிறந்த மனிதர்களை அரசியல் நிர்ணய சபைக்குக் கொண்டுவருவதற்கு எல்லா கட்சியினரும் முயற்சிக்கிறார்கள் என்ற செய்தி நமக்கு உற்சாகமூட்டுகிறது” என்று கிரிப்ஸ் கூறினார்.

அரசியல் நிர்ணய சபையில் “சிறந்த மனிதர்களை”க் கொண்டு பிரதான கட்சிகள் சண்டையிட்டுக்கொள்வார்கள்; ஆதலின் “சட்டதிட்டங்களை வகுக்கும் காரியம் சுலபமானது” என்று நினைப்பது முட்டாள்தனம்; அவ்விதம் அவர்கள் அடித்துக் கொள்ளும்போது “உதவி செய்ய”ச் சென்று பிரிட்டிஷார் தம் இஷ்டத்தைப் பூர்த்தி செய்துகொள்ளலாம்; இதுதான் இதற்கு அர்த்தம். இதை மிகப் பெரிய வெற்றியென்று கூறுகின்றனர்.

அரசியல் நிர்ணய சபைக்கு தேர்தல் முடிந்துவிட்டது. இனி இரண்டு வருடமோ, மூன்று வருடமோ, இந்த சபை “சட்ட திட்டங்களை வகுக்கும்” காரியத்தில் ஈடுபட்டிருக்கும். இதனுள் காங்கிரஸ், லீக் தலைவர்கள் மோதிக்கொள்வார்கள்.

அதன் பிரதிபலிப்பாக, ஜனங்களிடையேயும் சண்டை சச்சரவு வலுக்கும். ஏற்கனவேயே இந்த துக்ககரமான காட்சியை நாம் தேசமெங்கும் பார்க்க ஆரம்பித்துவிட்டோம்.

நிர்க்கதியான மைனாரிட்டியினராக சீக்கியர்களை ஏகாதிபத்தியத்தின் திட்டம் விட்டுவிட்டது என்பதற்காக, இதற்குக் காங்கிரசும், லீகும் தான் காரணம் என்று கூறி, ஹிந்துக்கள் மீதும் முஸ்லீம்கள் மீதும் சீக்கிய மக்களை பஞ்சாபில் அவர்களுடைய தலைவர்கள் தூண்டிவிடுகின்றனர். சுதந்திர இயக்கத்திற்கு முன்னணி வீரர்கள் பலரை அளித்த அந்த மக்கள், இப்போது சகோதரர்களை எதிர்த்துப் போராடக் கிளம்புகிறார்கள்.

அக்கிரமமாக வங்காளத்துடன் அஸ்ஸாமை ஏகாதிபத்தியத் திட்டம் சேர்த்திருப்பதற்கு, ஒரு புறத்தில் முஸ்லிம் லீக்குதான் காரணம் என்றும், மறு புறத்தில் வங்காளிகள்தான் காரணம் என்… அஸ்ஸாம் காங்கிரஸ் … மீதும், வங்… தை உண்டு… அஸ்ஸாம் … போராட லீக் … ட்டுகிறது.

தாழ்த்தப்பட்ட மக்களின் உண்மையான பிரதிநிதிகள் அரசியல் நிர்ணய சபைக்குப் போகமுடியாமலிருப்பதற்கு காங்கிரஸ்தான் காரணம் என்று கூறி, காங்கிரஸ் மக்களின்மீது தாழ்த்தப்பட்டோர் சம்மேளனம் போராட்டத்தைத் தொடுக்கிறது. பம்பாய், நாகபுரி, டில்லி முதலிய இடங்களில் கைகலப்புகள் ஏற்படுகின்றன.

அகமதாபாத்தில் ஏற்பட்ட வகுப்புக் கலகம் நம் கதியைக் கலக்குகிறது.

வாணியம்பாடியிலும் இக்கலகம் ஏற்பட்டுவிட்டது. யாராவது ஒரு ரௌடி எங்கேயாவது அக்ரமம் செய்தால், தலைவர்களின் கொள்கையால் பிரிந்து கிடக்கும் மக்களிடையே எந்த இடத்திலும் கலகத்தை ஒருநொடியில் உண்டாக்கிவிடலாம்.

ஒவ்வொரு மாகாணத்திலும் காங்கிரஸும், லீகும் தங்கள் தங்கள் அணியை ஒருவருக்கொருவர் எதிராக ஒன்றுதிரட்டுகின்றன.

சிந்து மந்திரிசபையைக் கவிழ்க்கக் காங்கிரஸ் முயற்சி; பஞ்சாப் மந்திரிசபையைக் கவிழ்க்க லீக் முயற்சி; அஸ்ஸாமிலிருந்து அரசியல்நிர்ணய சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்கு காங்கிரஸ் கட்சியின் உத்திரவும், அதற்கு லீகின் எதிர்ப்பும்; ஐக்கிய மாகாண சட்டசபையில் ஜமீன்தாரியை ஒழிக்கக் காங்கிரஸ் கொண்டுவரும் மசோதாவை, முஸ்லிம் எதிர்ப்பு திட்டமாக லீக் கருதுவது ஆகிய இவையெல்லாம் பிளவைப் பன்மடங்கும் அதிகப்படுத்தும்.

இந்த நிலைமையில் இடைக்கால சர்க்காரை ஏற்படுத்துவதற்கு வைஸ்ராய் பேச்சு வார்த்தைகளை ஆரம்பிப்பதற்கு என்ன அர்த்தம்? பழைய படியும் சிம்லா மகாநாட்டில் நடந்ததுபோல், காங்கிரஸ்—லீக் தலைவர்களை வேவல் மோதிக் கொள்ளச் செய்வான். அதன் பிரதிபலிப்பாக இன்றுள்ளதைவிட இன்னும் அதிகமாக ஜனங்களிடையே சண்டை சச்சரவு வளரும்.

இவ்விதம் சண்டை சச்சரவுமலிந்திருக்கும்போது, மிகவும் சுலபமாக தங்களுடைய அடிமைத் திட்டத்தை அரசியல் நிர்ணய சபையில் நிறைவேற்றி, ஏகாதிபத்ய யுத்த சக்கரத்தில் இந்தியாவை பிரிட்டிஷார் கட்டிப் போடுவார்கள்.

சென்னையில் அரசியல் நிர்ணய சபைக்கு தேர்தல் நடந்தபோது, “வேடிக்கைப் பார்க்க வந்தேன்” என்று கூறி, வெள்ளைக்கார முதலாளி டவுன் சட்டசபையில் சிரித்தான். ஆம்; நாம் அடித்துக்கொள்வது அவனுக்கு வேடிக்கையாக இருக்கிறது. அவனுடைய பலஹீனம் பலமாகவும், நம் பலம் பலஹீனமாகவும் மாறுவதைக் கண்டு அவனுக்கு சிரிப்பு வருகிறது.

காங்கிரஸ், லீக் தலைவர்களின் குருட்டுத்தனமான கொள்கைகளே இவ்விதம் ஜனங்களின் ஒற்றுமையை—சுதந்திர இயக்கத்தை—சீர்குலைக்கின்றன. காங்கிரஸ், லீக், சீக்கியர், தாழ்த்தப்பட்டோர் ஆகிய ஒவ்வொரு தலைமைப் பதவியும் ஏகாதிபத்தியத்தைக் குருட்டுத்தனமாக நம்புவதனால்தான், சகோதரர்களைத் தாக்கும்படி தம்மைப் பின்பற்றும் மக்களுக்கு ஆத்திரமூட்டுகின்றன. ஏகாதிபத்தியத்தை நம் பாத பொதுஜனங்களால்தான் தலைவர்களின் இந்தச் சீர்குலைவு வேலையை தடுக்கமுடியும். நம் பலஹீனத்தை பலமாக்குவதற்கு சர்வஜன ஒற்றுமையை நியாயத்தை அடிப்படையாகக்கொண்டு கட்டமுடியும். கம்யூனிஸ்டு கட்சி ஒன்றுதான் நியாயத்தை அடிப்படையாகக்கொண்ட திட்டத்தைக் கொடுக்கிறது.

# நமது மக்களைக் கைவிடாதே!

## மன்னருடன் சேராதே!

நம் நாட்டைச் சுரண்டி கொள்ளையடிக்கும் சக்திவாய்ந்த ஏகாதிபத்திய வெள்ளை முதலாளிகளில் ஒருவன் ஸர். ஜேம்ஸ் டோக். இந்திய முதலாளிகளில் ஒருவரான அழகப்ப செட்டியாரும், இன்னும் சில முதலாளிகளும் அந்த டோக்குடன் பங்காளிகளாகச் சேர்ந்து ஒரு கோடி ரூபாய் மூலதனத்திற்கு ஒரு புதிய கம்பெனியை சென்ற வாரம் ஆரம்பித்திருக்கின்றனர்.

இதற்கு என்ன அர்த்தம்?

"வெள்ளையனே! நீ வெளியேற வேண்டாம். இங்கேயே இரு. நாம் இருவரும் பங்காளிகளாகச் சேர்ந்து இந்திய மக்களைச் சுரண்டலாம்" என்பதே இதற்கு அர்த்தம். அதாவது, பரிபூரண சுதந்திரத்திற்குப் பதில், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துடன் இந்திய முதலாளித்துவம் பங்காளி உறவை ஏற்படுத்திக் கொள்கிறது. ஏகாதிபத்தியத்துடன் சமரசம் பேசி, பரிபூரண சுதந்திரம் கேட்கும் இந்திய மக்களைக் காட்டிக் கொடுக்கிறது.

அழகப்ப செட்டியார் கோஷ்டியைச் சேர்ந்த முத்தையா செட்டியார்களையும், கோயங்காக்களையும், கோபாலசாமி ஐயங்கார்களையும், காங்கிரஸ் தலைமைப் பதவி அரசியல் நிர்ணய சபைக்கு தேர்ந்தெடுத்திருக்கிறது. பரிபூரண சுதந்திரத்தை பிரிட்டிஷ் சர்க்கார் பிரகடனப்படுத்தாது இருக்கும்போது, அந்த சர்க்கார் கொடுத்த அடிமைத் திட்டத்தை காங்கிரஸ் ஏற்றுக்கொண்டதற்கும், டோக்குடைய பங்காளி உறவை அழகப்ப செட்டியார் ஏற்றுக்கொண்டதற்கும் வித்தியாசமில்லை. அரசியல் ரீதியாக இந்தப் பங்காளி உறவை ஏற்படுத்துவதற்கே முத்தையா செட்டியார்கள் அரசியல் நிர்ணய சபைக்குப் போகிறார்கள்.

ஜவஹர்லால் நேரு எவ்வளவு பயமுறுத்திய போதிலும் சரி, ஜின்னா எவ்வளவுதான் கூச்சலிட்ட போதிலும் சரி, பரிபூரண சுதந்திரத்திற்குப் பதில் பங்காளி உறவை ஏற்றுக்கொள்ள அழகப்ப செட்டியார் வர்க்கத்தை சேர்ந்தவர்கள் தயாராக இருப்பதால், தங்களுடைய அடிமைத் திட்டத்தை தடையின்றி நிறைவேற்றிவிடலாம் என்று பிரிட்டிஷ் ஏகாதிபத்யவாதிகள் நம்பிக்கையுடன் இருக்கின்றனர்.

சகோதரர்கள் மீது நம்பிக்கை வைக்காமல் ஏகாதிபத்யத்தை நம்புவது, தொழிலாளிவர்க்கத்தை வெறுப்பது ஆகிய கொள்கைகளை தேசிய தலைமைப்பதவிகள் கடைப்பிடிப்பதனால், அந்தந்த கட்சிகளில் பணமூட்டைகளின் ஆதிக்கத்தைத் தடுக்க முடியாமல் போகிறது. ஆதிக்கம் பெறும் பணமூட்டைகள், சரணாகதி பாதையில் தலைமைப் பதவிகளைப் பிடித்துத் தள்ளுகின்றன. கொஞ்சங்கொஞ்சமாக ஜனங்களின் நலன்களைக் கைவிடும்படி தூண்டுகின்றன. பண மூட்டைகளுக்கு விட்டுக்கொடுக்க ஆரம்பிக்கும் தலைமைப்பதவிகள், அவற்றின் பங்காளியாகிய ஏகாதிபத்யத்திற்கும், சமஸ்தான எதேச்சாதிகாரத்திற்கும் இறுதியில் விட்டுக்கொடுக்க வேண்டியிருக்கிறது.

காங்கிரஸ் தலைமைப் பதவியின் இந்த சரணாகதி போக்கை சமஸ்தான விஷயத்தில் மிகவும் தெளிவாகப் பார்க்கலாம்.

1939-ல் சமஸ்தான மக்கள் மகாநாடு சர்வஜன ஓட்டுரிமை கேட்டது. 1945-ல் பண்டித நேருவின் தலைமையில் கூடிய அதே மகாநாடு பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ளது போல, சொத்துள்ளவருக்கு மட்டும் ஓட்டுரிமை கொடுத்தால் போதும் என்றது. இப்போது, இம்மாத ஆரம்பத்தில் அதன் நிர்வாகக் கமிட்டி பம்பாயில் கூடியபோது, "அந்த ஓட்டுரிமைகூட வேண்டாம்; அதைவிட குறுகிய ஓட்டுரிமையில் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் மிகப் பெரிய பணக்காரர்களின் பிரதிநிதிகளைக் கொண்ட இன்றைய சமஸ்தான சட்டசபையிலிருந்தே அரசியல் நிர்ணய சபைக்கு பிரதிநிதிகளைப் பொறுக்கி எடுத்து அனுப்பினால் போதும்" என்று நேருவின் ஆக்ஞைப்படி ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதுவும், அரசியல் நிர்ணய சபைக்குச் செல்லும் அவ்வளவு பிரதிநிதிகளும் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமென்று கூறப்படவில்லை. மேலும் சமரஸம் பேசுவதற்கு இடம் விடப்பட்டது.

இம்மாதம் 23-ந் தேதியன்று, பேசிய ஸர். ஸி. பி. ராமசாமி ஐயர், சமஸ்தான ஜனங்களின் பிரதிநிதிகளை அனுப்ப முடியாது என்றும், இன்றைய சட்ட சபையில் அங்கத்தினர்களாக இருப்பவர்களிலிருந்தே ஆட்களைப் பொறுக்கி அரசியல் நிர்ணய சபைக்கு அனுப்ப முடியும் என்றும் சொன்னார். இன்றைய சட்டசபை அங்கத்தினர்களில் முக்காலே மூன்று வீசம் பேர் சர்க்காரின் ஆட்கள்.

சமஸ்தானத்திலிருந்து செல்லும் மொத்த பிரதிநிதிகளில் பாதிப் பேரைத்தான் இந்த சட்ட சபையிலிருந்து பொறுக்கி அனுப்ப முடியும் என்றும், மீதி பாதிப் பேர் சமஸ்தான அதிகாரிகள் என்றும் சொன்னார்.

இதை காங்கிரஸ் தலைவர்கள் ஒப்புக்கொண்டுவிட்டனர் என்று கூறப்படுகிறது. இதன்படி, சமஸ்தான மக்களுடைய உண்மைப் பிரதிநிதிகள் யாராலும் அரசியல் நிர்ணய சபைக்குப் போகமுடியாது.

இவ்விதம் தேசிய தலைமைப் பதவிகள் சரண் அடைவதை நன்கு பயன் படுத்திக்கொண்டு, 'சீர்திருத்தங்கள்' என்று ஜனங்களின் கண்ணில் மண்ணைத் தூவ சமஸ்தானாதிபதிகள் முற்படுகின்றனர். தேசிய தலைமைப் பதவிகள் இதை எதிர்க்காது என்ற திடநம்பிக்கையுடன், சமஸ்தான காங்கிரஸின் கோரிக்கைகளை ஸர் ஸி. பி. நிராகரித்தார்.

ஜின்னாவின் பாராட்டுதலுக்குப் பாத்திரமான ஹைதராபாத் நிஜாம் பிரகடனப்படுத்தியிருக்கும் சீர்திருத்தங்களின்படி, ஒரு "சட்டசபை" ஏற்படும். ஆனால் சாதாரண ஜனங்களுடைய பிரதிநிதிகள் அதற்குள் செல்லவே முடியாது. சமஸ்தானாதிபதியால் நியமிக்கப்படும் கைக்கூலிகள் பாதிபேரும், மிகப்பெரிய ஜாகீர்தார்கள், வியாபாரிகள் முதலியோரின் பிரதிநிதிகள் பாதிபேருமாக அதில் நிரம்பியிருப்பர். அவர்களுக்குக் கூட கேள்வி கேட்கத்தான் உரிமையுண்டேயொழிய, நிர்வாகத்தில் கொஞ்சங்கூட பங்கு கிடையாது. இதோடு, சதா சர்வகாலமும் ஹிந்து முஸ்லிம் சண்டை நடந்துகொண்டிருப்பதற்கு அதில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது!

இதைப்போன்ற சீர்திருத்தங்களை தான் ஸர். ஸி. பி. யும் பிரகடனப் படுத்தப் போவதாகக் கூறுகிறார். சுருக்கமாக, எல்லா சமஸ்தானங்களிலும் இப்போது மன்னர்கள் வெளியிடும் சீர்திருத்தங்கள் கீழ்க்கண்டபடிதான் இருக்கின்றன: நூற்றுக்கு 50 பேர் நியமன அங்கத்தினர்கள்; மிகமிக குறுகிய ஓட்டுரிமை; எக்காலத்தும் அகற்றமுடியாத நிர்வாக சபை; வரவு செலவை கட்டுப்படுத்த கொஞ்சங்கூட அங்கத்தினர்களுக்கு உரிமை கிடையாது.

இந்த "சீர்திருத்தங்களை" ஒப்புக்கொள்வது என்றால் கலப்பற்ற எதேச்சாதிகாரத்தை ஒப்புக்கொள்வது என்றே அர்த்தம்.

காங்கிரஸ் லீக் தலைமைகளின் சரணாகதி சமரஸக் கொள்கை, எவ்வித எதிர்ப்புமின்றி இந்த எதேச்சாதிகாரத்திற்கு சமஸ்தான மக்கள் தலை வணங்குவதிலேயே கொண்டு போய்விடும்.

காங்கிரஸ்—லீக் தலைமைகள் நிலைப்பகற்குமாறாக, சமஸ்தானாதிபதிகளோ, காங்கிரஸையும் லீகையும் ஏமாற்றி தங்களுடைய சொந்த ஆதிக்கத்தையும், ஏகாதிபத்யத்தின் ஆதிக்கத்தையும் நிலைநாட்ட சதி செய்கிறார்கள்!

சமஸ்தானாதிபதிகளின் 93 ஓட்டுகளை சுலபமாக வாங்கிவிடலாம் என்று கனவு காணும் தலைமைப் பதவிகள், எப்படியாவது சமஸ்தான மக்களின் போராட்டங்களைத்தடுத்து நிறுத்துவது என்று தீர்மானித்துவிட்டன. இந்த தீர்மானத்தினாலேயே நேருஜியைத் தலைவராகக் கொண்ட சமஸ்தான மக்கள் மகாநாட்டின் நிர்வாகக் கமிட்டி, சமஸ்தான மக்கள் இயக்கத்தில் முன்னணியில் நிற்கும் கம்யூனிஸ்டுகள் மீது நடவடிக்கை எடுத்துக்கொள்ளத் தொடங்கியிருக்கிறது. இம்மாதம் பம்பாயில் கூடிய அந்தக் கமிட்டி, சமஸ்தானங்களில் தொழிலாளி வர்க்கம் நடத்திவரும் பல மகத்தான வேலை நிறுத்தப் போராட்டங்களைக் கண்டித்திருக்கிறது. உண்மையான தொழிற்சங்கங்களை விட்டுவிட்டு, பிர்லாவின் "ஹிந்துஸ்தான் மஸ்தூர் சேவா சங்க'த்தின் உத்திரவுப்படி தொழிலாளர் நடந்துகொள்ள வேண்டும் என்று கூறியிருக்கிறது. ஹைதராபாத் சமஸ்தானத்திலுள்ள ஆந்திர மகாசபையின் தலைவர் ஒரு கம்யூனிஸ்டானதினால், அவரை அச்சபையிலிருந்து விலகும்படி நேரு கூறியிருக்கிறார். விலகாவிட்டால், அந்த சபையையே அகில இந்திய ஸ்தாபனத்திலிருந்து நீக்கிவிடப்போவதாக பயமுறுத்தியிருக்கிறார்

கம்யூனிஸ்டு கட்சியை சட்ட விரோதமாக்க வேண்டுமென்று சென்றவாரம் ஸர். ஸி. பி. பேசியதை இதோடு ஒத்திட்டுப் பார்த்தால், எவ்வளவு தூரம் காங்கிரஸ் தலைமைப் பதவி சமஸ்தான் எதேச்சாதிகாரிகளுக்குத் தாளம் போடுகிறது என்பது விளங்கும்.

எது எப்படி இருந்தபோதிலும், பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் இந்திய சமஸ்தானங்களையே தன்னுடைய கடைசி தளமாக வைத்திருக்கிறது என்பதைநாம் மறந்துவிடவேண்டாம். பரிபூரண சுதந்திரம் வேண்டுமென்றால் இந்தத் தளங்களிலிருந்தும் அது விரட்டப்பட வேண்டும்.

சமஸ்தானங்களில் வாழும் 9 கோடி மக்களுடையப் போராட்டம் மிகவும் கடினமானதாகவும், உக்கிரமானதாகவும் இருக்கப் போகிறது. ஏகாதிபத்யமும், எதேச்சாதிகாரமும் மிகவும் கொடுமையாக மக்களைத் தாக்கி அடக்கும்.

சகல ஜனங்களும் சேர்ந்து நிற்கும் மகத்தான ஐக்கிய முன்னணியினாலேயே அந்த ஹிட்லரீய அடக்குமுறையை சமாளித்து, எதேச்சாதிகார'கோட்டைகளை வீழ்த்த முடியும். ஆகவே, எதேச்சாதிகாரத்தை ஒழிப்பது, ஜனங்களுடைய ராஜ்யாதிகாரத்தை நிலைநாட்டுவது, பரிபூரண ஜனநாயகத்தை வளர்ப்பது என்ற பொதுவான திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு எல்லா தேசபக்தர்களும் ஒன்றுபட்டாக வேண்டும்.

இந்த ஒற்றுமைப் போராட்டத்திலும் ஜனநாயக உரிமைப் போராட்டத்திலும் விவசாயி, தொழிலாளி வர்க்கப் போராட்டத்தை ஸ்தாபன ரீதியாக உருவாக்குவதன் மூலமே சமஸ்தான கம்யூனிஸ்டுகளினால் முன்னணியில் நிற்க முடியும்.

பிரிட்டிஷ் பணமூட்டைகளுடனும் சமஸ்தான எதேச்சாதிகாரிகளுடனும் பங்காளி கூட்டுறவு ஜனங்களுக்கு பேரழிவை உண்டாக்கும். பரிபூரண சுதந்திரமே ஜனங்களுடைய சுபிட்ச வாழ்வுக்கு அத்தியாவசிய தேவை.

இதற்கு ஜனங்கள் போராட வேண்டும். தினசரி தொழிலாளி, விவசாயி மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும், ஜனநாயக உரிமைகளைப் பெறுவதற்கும் நடத்தும் போராட்டங்களை மேலும் மேலும் வளர்த்து வலுவுள்ளதாக ஆக்க வேண்டியது ஒவ்வொரு தேசபக்தனுடைய கடமை. இந்தப் போராட்டங்கள்தான் இறுதியில் ஏகாதிபத்யத்தையும், சமஸ்தான எதேச்சாதிகாரத்தையும் வீழ்த்தும்.

—இஸ்மத் பாஷா

---

(6-ம் பக்க தொடர்ச்சி)

போதுள்ள மற்ற லீவ் நாட்களுடன் சேர்க்கக்கூடாது. இது பிரத்தியேகமாக தரப்படவேண்டும். நாங்கள் கூறும் இந்த வியாக்கியானம் தான் சரி என்று சர்க்கார் உத்திரவிடவேண்டும்.

மில் தொழிலாளர் நிலைமையைப் பற்றி விசாரணைக் கமிட்டி ஏற்படுத்தியிருப்பதை வரவேற்கிறோம். இதன் சிபார்சுகள் வெளியாக அதிக காலமாகும். அந்த சிபார்சுகளுக்கு இரு கட்சியினரும் இணங்கக்கூடிய முறையில் உத்திரவாதமில்லை. ஆதலால் சிபார்சுகள் வெளிவந்து அமுலுக்கு வருகிற வரையில்—இந்த இடைக்காலத்தில் பி. அண்டு ஸி. மில்லில் கொடுக்கப்படும் சம்பளத்தைக் காட்டிலும் உடனே 25 சத வீதம் சம்பள உயர்வு மாகாண முழுவதுமுள்ள மில் தொழிலாளர்களுக்கு கிடைக்க வேண்டும். அது அமிதலாப வரி ரத்து செய்யப்பட்ட 1-4-46-ந் தேதி முதல் அமுலுக்கு வரவேண்டும்.

---

## சென்னை

# மாகாண தொழிற்சங்க காங்கிரஸ் தீர்மானங்கள்

சென்னை மாகாண தொழிலாளர்களின் நல்வாழ்வுப் போராட்டங்களைப்பற்றியும், இன்று மந்திரி சபை கொண்டிருக்கும் கொள்கைகளைக் கண்டித்தும், தொழிற்சங்கங்களை உடைக்க முதலாளிகள் செய்யும் சதிகளை எதிர்த்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

சென்னை மாகாண தொழிற்சங்க காங்கிரசின் காரியக் கமிட்டி கூட்டம் ஜூலை 19, 20 தேதிகளில் தலைவர் வி. சக்கரை செட்டியார் தலைமையில் கூடி கீழ்க்கண்ட தீர்மானங்களை நிறைவேற்றியது. முதன்முதலாக, அகில இந்திய தபால்-தந்தி தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்திற்கு ஆதரவாக ஜூலை 23-ல் சென்னை நகரிலும், 25-ந்தேதி மாகாணம் பூராவிலும் பொதுவேலை நிறுத்தம் செய்து ஆர்ப்பாட்டங்கள் நடத்த வேண்டுமெனத் தீர்மானித்தது.

### மந்திரி சபையின் கொள்கை

யுத்தச் சுமை முழுவதும் தொழிலாளி வர்க்கத்தின்மீதே விழுந்தது. யுத்தம் முடிந்த பின் வாழ்க்கை நிலை படுமோசமாயிற்று. இதைச் சகிக்க முடியாது என்று தொழிலாளிகள் தீர்மானித்துவிட்டார்கள். அதனால் தான் எங்கு பார்த்தாலும் கொந்தளிப்புகளும், வேலை நிறுத்தங்களும் காட்டுக் கனல்போல் பரவி வருகிறது. இது ஒருபுறமிருக்க, வளர்ந்து வரும் தொழிலாளர் சக்தியை நசுக்க, முதலாளிகள் தொழிற் சங்கத்தை தாக்க முனைகிறார்கள். தொழிற்சங்க இயக்கம் பிரமாண்டமாக வளர்வதைக் கண்டு பீதியடைந்த முதலாளிகள், இயக்கத்தை நசுக்க பழைய முறைகளால் முடியாதென்பதை உணர்ந்து, தொழிலாளிகளிடையே பிளவேற்படுத்தி, ஒருவர் மீதொருவர் பாய வேண்டுமென்பதற்காக கம்பெனி யூனியன்களை ஏற்படுத்துகிறார்கள்.

இதை மந்திரி சபை பார்த்துக் கொண்டிருக்கக்கூடாது. கம்பெனி யூனியன்களை சிருஷ்டிப்பதும் ஆதரிப்பதும் குற்றமென்று தொழிற் சங்க சட்டத்தில் திருத்தம் ஏற்படுத்துவதற்காக மத்திய சட்ட சபையில் ஒரு மசோதா வரப்போகிறது. அதன்படி மந்திரி சபையும் இந்த கம்பெனி யூனியன்களுக்கு விரோதமாக நடவடிக்கை எடுக்கவேண்டும்.

சென்னை மாகாண டிரான்ஸ்போர்ட் தொழிலாளர் யூனியனை ஏற்படுத்தியவர்கள் டி. வி. எஸ். முதலாளி என்று தெரியவருவதால் அதை அகில இந்திய தொழிற் சங்கத்துடன் இணைக்கக் கூடாது.

### மறியல் வியாக்யானம்

பிரதம மந்திரியின், அமைதியான மறியல் வியாக்யானத்தை யாரும் ஒத்துக்கொள்ள முடியாது. வேலை நிறுத்தக் காலத்தில், போலீஸ்காரர்களும் முதலாளியின் குண்டர்களும் கருங்காலிகளை அழைத்து வருகிறார்கள். முதலாளியின் கார்களும் லாரிகளும் உபயோகிக்கப் படுகின்றன. இச்சமயத்தில் கருங்காலிகளின் அருகில்கூட நெருங்காமல், கேட்டுக்கு அப்பால் வெகு தொலைவில் ஓரமாக நின்றுகொண்டு மறியல் செய் என்பது, தொழிலாளி வர்க்கத்தின் மறியல் உரிமையையே கேலிசெய்வதாகும். இதை தொழிலாளர்கள் சகிக்கமுடியாது. காந்திஜி தலைமையில் நடந்த உப்பு சத்யாக்ரஹத்தின் போது தர்சனாவிலும், வேதாரண்யத்திலும் மறியல் செய்த சுதந்தர வீரர்கள் காட்டிய வழியை நாங்கள் கைவிட மாட்டோம். தியாகி பாபு கானுவும், உலக முழுவதுமுள்ள தொழிலாளத் தியாகிகளும் காட்டிய வழியைக் கைவிடமாட்டோம்.

கருங்காலிகளை அமர்த்துவதைத் தடுக்காமல், தொழிலாளர்களின் மறியல் உரிமையைப் பறிப்பதென்றால், அது முதலாளிக்கு ஆதரவாகவும் தொழிலாளிக்கு விரோதமாகவும் கடைப்பிடிக்கும் கொள்கையாகும்.

ஆகவே, மந்திரி சபை கருங்காலிகளைத் தடுக்க உடனே நடவடிக்கை எடுக்கவேண்டும்.

### கன்ஸிலியேஷன்

மந்திரிசபை கையாளும் தொழிற் கொள்கை, தொழிலாளர்களின் கொந்தளிப்புகளுக்கு பரிகாரம் தேடுவதற்குப் பதிலாக, அதை தடுத்து நிறுத்துகிறது. தகராறுகளையெல்லாம் கன்ஸிலியேஷனுக்கோ, அட்ஜூடிகேஷனுக்கோ விடப்படுகிறது. தொழிலாளர்களுக்கென திட்டவட்டமான கொள்கைகளை சர்க்கார் வகுக்கவில்லை. தகராறுகளைத் தீர்த்துவைக்க நியமிக்கப்படும் நீதிபதிகள் பரம்பரையாகவே தனிவுடமையை நிலைநாட்டும் சட்டங்களில் பழக்கப்பட்டவர்களாயிருப்பதால் அதிக பிரயோஜனம் ஏற்படுவதில்லை.

உயிர் வாழ்வதற்கு வேண்டிய சம்பளமும், நாகரீகமான வேலை நிலைமையும் இன்னின்னது என்று சட்டபூர்வமாக, மந்திரி சபை உரிமை கொடுத்தால்தான் தொழில் தகராறுகள் குறையும்.

வர்த்தக குமாஸ்தாக்கள், கிளர்க்குகள் உட்பட பல்வேறு தொழில்களில் வேலை செய்யும் சகலருக்கும் உரிமைச் சாஸனம் தயாரிப்பதற்காக ஒரு கமிட்டி ஏற்படுத்தியிருக்கிறோம். அதில் தோழர்கள் P. ராமமூர்த்தி, P. R. K. சர்மா, சீதாராம நாயுடு, T. S. ராமானுஜம் அனந்த நம்பியார், குருசாமி, P. வேங்கடேஸ்வரலு ஆகியவர்கள் இருப்பார்கள்.

### பிரஜா உரிமை

இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் பேரால் பொதுக் கூட்டங்களையும் ஊர்வலங்களையும் கலைக்கவும், கலைய மறுத்தால் கைது செய்யவும் தடியடி நடத்தவும் போலீஸ் கமிஷனர்களுக்கு அனுமதி கொடுத்தது அட்வைஸர் ஆட்சி.

பொதுஜன மந்திரி சபை வந்த பின்னும் இந்த அட்டூழியம் நின்றபாடில்லை. நிராயுத பாணிகளான பி. அண்டு ஸி. மில் தொழிலாளர்களின் ஊர்வலத்தை தடியடி நடத்தி கலைத்தது போலீஸ். பெண் தொழிலாளர்களும் இந்த அட்டூழியத்துக்கு ஆளானார்கள். கோவை, விக்கிரமசிங்கபுரம் முதலிய இடங்களிலும் த... உத்தரவுகள் விதிக்கப்படுகின்... உடனே இச்சட்டத்தை மந்திரி... வாபஸ் செய்யவேண்டும். ...லாளிகள் எல்லாரும் தம் உரி... சிலநாட்ட போராடுவதற்... ...ாராக வேண்டும்.

### டெக்ஸ்டைல் கண்ட்ரோல் போர்டும்—கள்ளமார்க்கெட்டும்

துணி, நூல் விலையை நிர்ணயிக்கும் அகில இந்திய டெக்ஸ்டைல் கண்ட்ரோல் போர்டில் மிகப்பெரிய மெஜாரிடியாயிருக்கும் பேர்வழிகள் கொழுத்த மில் முதலாளிகள். இவர்கள் மசோதாப்படி துணி, நூல் விலையை உயர்த்தி யிருக்கிறது பிரமி சர்க்கார். யுத்த காலத்தும் அதற்குப் பின்னரும் இக் கும்பல் அடித்த கொள்ளைக்கு கணக்கு வழக்கு கிடையாது. 1-4-46 முதல் அமித லாப வரியும் ரத்தாகிவிட்டது. இதனாலும் லாபம் இன்னும் உயர்கிறது. இத்துடன் விலையையும் ஏற்றுவதானது நாட்டு மக்களை வற்ற வற்ற பிழிவதாகும்.

மந்திரி சபை இதில் தலையிட்டு போர்டை திருத்தியமைத்து ஜனங்களின் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதோடு, துணி, நூல் விலையையும் ஜனங்கள் வாங்கக்கூடிய அளவுக்கு குறைக்க வேண்டும்.

உணவு, துணி, நூல் இவற்றில் கள்ளமார்க்கெட் நடத்துகிறவர்களை சென்னை, வடாற்காடு, தென்னாற்காடு, மதுரை, கோவை, பெஜவாடா, ராஜமந்திரி முதலிய இடங்களிலுள்ள தொழிலாளிவர்க்கம் கையுமெய்யுமாய்ப் பிடித்துள்ளதை பாராட்டுகிறோம். மில் முதலாளியும் பெரும் வியாபாரியுமான டாக்டர் அழகப்பா செட்டியார் முருகப்பா அண்டு சன்ஸ், ஜானகிராம் அண்கோ, கோதண்டராம வீவிங்மில்ஸ், ராஜா சர் அண்ணாமலை செட்டியாரின் குடும்பத்துக்கு சொந்தமான கோவை லோட்டஸ் மில் இவர்களெல்லாம் பிடிபட்ட திருடர்கள். இவர்களையெல்லாம் கைது செய்து தண்டிக்கவேண்டும். தொழிலாளி மக்கள் கள்ளமார்க்கெட் ஒழிப்பு இயக்கத்தை விறுவிறுப்பாக நடத்த வேண்டும். கள்ளமார்க்கெட்காரர்களை தண்டிக்குமாறு நிர்ப்பந்திக்க அவசியமானால் பொது வேலை நிறுத்தமும் செய்யத் தயாராக வேண்டும்.

### இதர தீர்மானங்கள்

மாகாண முழுவதுமுள்ள நகர சுத்தி தொழிலாளர்களிடையே அபார விழிப்பு ஏற்பட்டிருக்கிறது. அவர்களுடைய கோரிக்கைகளை 9 மாதத்திற்குமுன்பே தெரிவித்தும் இன்னும் யாதொரு பலனையும் காணோம். அதனால் ஆகஸ்டு மத்தியில் இவர்கள் பொது வேலை நிறுத்தம் செய்ய நேரிடலாம். சென்னை கார்ப்பொரேஷன் கமிஷனரின் போக்கு கண்டிக்கத்தக்கது. மந்திரி சபை உடனே தலையிட வேண்டும்.

கைத்தறி துணி விலையை நிர்ணயிப்பதை வரவேற்கிறோம். ஆனால் கைநெசவுத் தொழிலாளர் சங்கங்களைக் கலந்து சரியான கூலியையும் நிர்ணயித்து விடவேண்டும்.

துணி விலையை முத்திரையிடுவதற்கு செய்யப்படும் ஏற்பாட்டில், தொழிலாளிக்கு போதிய பிரதிநிதித்வம் இருந்தால்தான் நியாயமான லாபத்தை தொழிலாளி பெற வழியேற்படும்.

அதிக கட்டணம் வாங்கி பொது மக்களை வஞ்சித்து, குறைந்த கூலி கொடுத்து தொழிலாளர்களை வதைத்து, கொள்ளை லாபமடிக்கிறது பஸ் முதலாளித்துவம். பஸ் போக்குவரத்தை இனிமேல் தனிப்பட்டவர்களிடம் விடக்கூடாது. சர்க்காரே மேற்கொண்டு தொழிலாளர் சங்கங்களைக் கலந்து கூலி உயர்வு முதலிய கோரிக்கைகளைத் தரவேண்டும்:

10 நாள் ரிகுபரேடிவ் லீவை, தற்

(5-ம் பக்கம் பார்க்க)

---

### சென்னை கார்பொரேஷன்:

## கோரிக்கை முழுவதையும் ஒப்புக்கொள்ளவேண்டும்

சென்னை கார்ப்பரேஷன் கமிஷனர் ஷெனாய் கடந்த 22-7-46-ல் கார்ப்பரேஷன் யூனியன்களின் தலைவர்களை நகரசபை மண்டபத்துக்கு அழைத்து சமரசம் பேசினர். வேலைநிறுத்த நோட்டீஸ் கொடுத்திருக்கும் சென்னை கார்ப்பரேஷன் லேபர் யூனியன் சார்பாக தோழர்கள் கருப்பண்ணன், D. செஞ்சையா, சூரா ரெட்டி, பாலசந்திர மேனன் முதலியவர்கள் பேசினார்கள். ஸ்ட்ரைக்கைத் தவிர்க்க வேண்டுமானால் பாதி கிணறு தாண்டினால் போதாது என்பதை கமிஷனர் உணரவில்லை.

செங்கொடியைத் தூக்கிப் பிடித்துள்ள 11000 கார்ப்பரேஷன் தொழிலாளர்களும் கமிஷனரின் பிடிவாதத்தை உடைக்க கிளம்பினார்கள். 4000 பேர் சங்கத்தில் சேர்ந்தனர். நூற்றுக் கணக்கான பொதுக்கூட்டங்களும் பல்லாயிரக் கணக்கான நோட்டீஸ்களும் பொது மக்களுக்கு விஷயத்தை விளக்க வெளியிடப்பட்டன. ஷெனாயின் பொய்ப் பிரசாரம் தகர்ந்தது. மிரட்டல் ஒழிந்தது. சூழ்ச்சிகள் தோற்றன.

தன் கங்காணிகள் தலைமையிலும் கவுன்சிலர்களின் தலைமையிலும் உள்ள அரை டஜன் காகிதச் சங்கங்களிலுமுள்ள அங்கத்தினர் எண்ணிக்கை, செங்கொடி யூனியன் அங்கத்தினரின் பாதி அளவுகூட இல்லையென்பதையும் கமிஷனர் தெரிந்து கொண்டார்.

22-7-46-ல் சமரசப் பேச்சு நடந்தது. அன்று கார்ப்பரேஷன் கட்டிடத்தில் 6000 தொழிலாளருக்கு மேல் வேலை நிறுத்த பாட்ஜுகளை அணிந்து கொண்டு ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தார்கள். இவற்றையெல்லாம் உணர்ந்த கமிஷனர் "ஸ்ட்ரைக் நோட்டீஸ் கொடுத்ததால்தான் 10 லட்சம் ரூபாய் கொடுக்க வேண்டிவந்தது" என்று கமிஷனர் கூறினர். இது காகித சங்கத் தலைவர்களுக்கு ஆத்திரமூட்டியது. ஆட்சேபித்தனர். ஆனால் கமிஷனர், தான் கூறியதுதான் சரியென்று வற்புறுத்தினர்.

### சமரசப் பேச்சின் பலனாக

கமிஷனர் ஒப்புக்கொண்ட விஷயங்கள்:

கூலி உயர்வு: 6 ரூபாய் மாதக் கூலி பெறும் 300 பாய் கூலிகளுக்கு இனி 15 ரூபாய் சம்பளம் கிடைக்கும். ரூ. 15க்கும் கீழாக யாருக்கும் சம்பளமிருக்காது. ரூ 15க்குமேல் வாங்குகிறவர்களுக்கு உடனடியாக ரூ. 2 உயரும்.

அசுத்த வேலை பார்க்கும் 1200 பேர்களுக்கு அன்கிளீன் அலவன்ஸ் 2 ரூபாயும், யூனிபாரம் டிரஸ், வாரமொரு தினம் விடுமுறை, 2 வருஷ சர்வீஸ்காரர்களுக்கு வேலை நிரந்தரம், பிராவிடண்டு பண்டு வசதியும் கொடுப்பதாகக் கமிஷனர் கூறினர்.

### கோரிக்கைகளைக் கொடுத்து ஸ்ட்ரைக்கை தவிர்

சங்கப் பிரதிநிதிகள் கேட்பது போல வீட்டு அலவன்ஸ் 2 ரூபாயும் பஞ்சப் படியில் 5 ரூபாய் ஏற்றியும் சகட்டுமேனிக்கு ரூ. 5கூலி உயர்வும் கொடுத்தால்தான் தொழிலாளர்கள் திருப்தியடைவார்கள். இல்லையேல் 11000 பேரையும் வேலை நிறுத்தத்தில் இழுத்துவிட்ட குற்றம் கார்ப்பரேஷன் நிர்வாகத்தையே சேரும்.

## சைனாவில்

# அமெரிக்க ஏகாதிபத்தியம்

## உள்நாட்டு போரை வளர்க்கிறது

கடந்த ஒரு வருட காலமாக அமெரிக்க ஏகாதிபத்யம் சைனாவில் தங்களது பொருளாதார ஆதிக்கத்தை நிலைநாட்டி வருகிறது. உதாரணமாக,

● சைனாவிலுள்ள நதிகளில், அமெரிக்கக் கப்பல் கம்பெனிகள் ஏகபோக வியாபாரம் செய்ய ஏற்கெனவே உரிமை பெற்று விட்டன. இதன் விளைவாக சீன கம்பெனிகள் அழிந்து போகின்றன.

● ஷாங்காய் நகரத்திலுள்ள சுங்க இலாக்காவிற்கு ரிச்சர்ட்வைட் என்ற பிரிட்டிஷ் அதிகாரி நியமிக்கப்பட்டிருக்கிறார். சுங்கவரி மூலமாகக் கிடைக்கும் ஏராளமான வருவாயை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் விழுங்கி வருகிறது.

● மூன்று கோடி சீனர்கள் பஞ்சத்தால் தவிக்கும்பொழுது, சைனாவிலிருந்து பத்து லட்சம் டன் கோதுமையை பாஸிஸ்டு ஜப்பானிய சர்க்காரை ஆதரிப்பதற்காக, ஜப்பானுக்குக்கொண்டு போயிருக்கிறது அமெரிக்க ஏகாதிபத்தியம்.

● அமெரிக்காவில் உற்பத்தி செய்த பொருள்கள் சைனாவில் தினே தினே ஏராளமாக இறக்குமதி செய்யப்படுகின்றன. இதனால், சைனாவிலுள்ள சுதேச தொழிற்சாலைகளில் 90 சத விகிதம் மூடப்பட்டிருக்கின்றன.

● ஸிங்டாவ் முதலிய துறைமுகங்களை அமெரிக்க ஏகாதிபத்தியம் பெறப்போகிறது. எனவே முன்போல், சைனா ஏகாதிபத்தியங்களின் அடிமை நாடாக மாறப்போகிறது.

இவ்வாறு அமெரிக்க ஏகாதிபத்தியம் அரசியல், பொருளாதாரத் துறையில் சைனாவை அடிமைப் படுத்தி வருகிறது.

சைனாவிலுள்ள கம்யூனிஸ்டுகளும் ஸ்ரீமதி டாக்டர் ஸன்யாட் ஸன் போன்ற ஜனநாயக வாதிகளும் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் ஆதிக்கத்தை எதிர்க்கிறார்கள். குவோமிண்டாங் கட்சியிலுள்ள பிற்போக்காளர்கள் மாத்திரம் ஏகாதிபத்தியத்தின் ஆதிக்கத்தை ஆதரிக்கிறார்கள். எனவே அமெரிக்க ஏகாதிபத்தியம் பிற்போக்குக் குவோமிண்டாங் கட்சிக்கு ராணுவ உதவியளித்து வருகிறது. உதாரணமாக,

● அமெரிக்காவிலுள்ள சட்டசபையில் வெளிநாட்டு விவகாரக் கமிட்டியில் "சைனாவுக்கு ராணுவ உதவி புரியவேண்டும்" என்று ஒரு மசோதா நிறைவேறியிருக்கிறது. இதை 15 பேர்கள் ஆதரித்தார்கள். இரண்டுபேர்கள் எதிர்த்தார்கள். இந்த மசோதாப்படி அமெரிக்க ஏகாதிபத்தியம் பிற்போக்குக் குவோமிண்டானுக்கு ராணுவத்தையும், தளவாடங்களையும் கொடுத்து வருகிறது. பத்துலட்சம் சீனர்களுக்கு ராணுவப் பயிற்சி அளிக்கப் போகிறார்களாம்.

● குத்தகை, கடன் மசோதா யுத்தகாலத்தில் அமுலுக்கு வந்தது. 1945-ம் வருடம் ஆகஸ்ட் மாதம் 21-ந் தேதியன்று, இந்த மசோதாவை ரத்து செய்துவிட்டதாக அமெரிக்க சர்க்கார் அறிவித்தது. ஆனால், இந்த மசோதாப்படி, சைனாவுக்கு 18 கோடி ரூபாய்க்கு ராணுவத் தளவாடங்கள் முதலிய பொருள்களை கொடுத்து வருகிறது.

● சைனாவில், அமெரிக்கப் படைகளும், விமானங்களும், யுத்தக் கப்பல்களும் ஏராளமாக இருக்கின்றன. ஜனநாயகவாதிகளுக்கு எதிராக நேரடியாகப் போர் புரிந்தும் வருகிறார்கள்.

● இதைத் தவிர, பிற்போக்குக் குவோமிண்டாங் படைகளுக்கு, பிரபல ஜெர்மானிய பாஸிஸ்டுகள் ராணுவப் பயிற்சி கொடுத்து வருவதாக அமெரிக்க யுனைட்டெட் பிரஸ் ஏஜென்ஸியின் ஷாங்காய் நிருபர் அறிவிக்கிறார்.

அமெரிக்க ஏகாதிபத்தியமும், பிற்போக்கு குவோமிண்டாங் சர்க்காரும் விஸ்தாரமாக உள்நாட்டு யுத்தத்தை நடத்த ஏற்பாடு செய்து வருகின்றன. இந்த யுத்தத்தை சீன கம்யூனிஸ்டுகளுக்கும், குவோமிண்டாங் கட்சிக்குமிடையே நடக்கும் சண்டையென்று அறிவு சூன்யங்கள் பிதற்றுகின்றன.

"சீனப் பொதுவுடைமைக்காரர்களுக்கு ரஷ்ய ஆதரவு இருக்கிறது. மற்ற நாட்டு தோழர்களைப்போல மாஸ்கோ உத்தரவுக்குக் காத்துக் கொண்டிருப்பதை கடமையாகக் கொண்டவர்களே சீனப் பொதுவுடைமைக்காரர்களும்............" என்று தினசரி ஊளறிக் கொட்டுகிறது (26-7-46) ஏகாதிபத்தியங்களுக்கு வால் பிடிக்கிறது.

ஆனால், இது உண்மையல்ல. ஏகாதிபத்திய பத்திரிகைகளான "மாஞ்செஸ்டர் கார்டியன்," "டைம்ஸ்" போன்ற பத்திரிகைகளே, "அமெரிக்காதான் உள்நாட்டு விவகாரத்தில் தலையிட்டு வருகிறது. இதை உடனே நிறுத்தவேண்டும்" என்று எழுதுகின்றன. சோவியத் யூனியன் சீனப் பொதுவுடைமைக் கட்சிக்கு உதவி புரிவதாக ஒரு வார்த்தைகூட எழுதவில்லை.

இதோ சீன மக்கள் என்ன சொல்கிறார்கள் என்பதைப் பாருங்கள்!

சுங்கிங்கிலுள்ள 4,271 பிரபல தலைவர்கள் சமர்ப்பித்த மகஜரிலும், ஜூன் மாதம் 22-ந்தேதியன்று 5 லட்சம் சீனர்கள் ஷாங்காயில் நடத்திய பிரம்மாண்டமான ஆர்ப்பாட்டத்திலும், மாணவர்களும், ஆசிரியர்களும் ஷாங்காயில் நடத்திய பிரம்மாண்டமான ஆர்ப்பாட்டத்திலும் (இதேமாதிரியாக சைனா முழுவதும் நடக்கிறது) "கூட்டு சர்க்கார் வேண்டும்; உள்நாட்டு யுத்தத்தை நிறுத்தவேண்டும்; அமெரிக்கப் படைகளை உடனே வாபஸ் வாங்கவேண்டும்" என்று கோஷித்தார்கள்.

அமெரிக்க ஏகாதிபத்தியம் சைனாவின் உள்நாட்டு விவகாரத்தில் தலையிட்டு, உலக சமாதானத்திற்கு உலை வைத்து வருகிறது.

—R. H. நாதன்

(2-ம் பக்க தொடர்ச்சி)

களில் முக்கியமானவர் 4 பேர் நீக்கப்பட்டனர்; 10 பேருக்குமேல் சஸ்பெண்டுசெய்யப்பட்டனர்.

கடந்த 22ந்தேதியன்று பெயின்ட் ஷாப் கமிட்டியின் காரியதரிசியும், தலைவரும் சஸ்பெண்டு செய்யப்பட்டனர். தொழிற் சங்கத்தின் சார்பில் சில தொழிலாளர்களின் கோரிக்கைகளையெடுத்து வாதித்ததே காரணம். இந்த இருவரையும் வேலையை விட்டுத் தள்ள நிர்வாகம் குற்றப் பத்திரிகை தயாரிக்கிறது.

இந்த தாக்குதலைக் கண்டு ஆத்திரமடைந்த தொழிலாளர்கள், எதிர்த்துப் போராடுவதென்ற உறுதியுடன் 23-ந்தேதி காலையிலிருந்து உள்ளிருப்பு வேலை நிறுத்தம் தொடங்கிவிட்டனர். சஸ்பென்ஷன்களை ரத்து செய்யும்படியும், குற்றப் பத்திரிகையை வாபஸ் வாங்கும்படியும் கிளர்ச்சி வலுக்கிறது.

# கைத்தறி நெசவு தொழிலாளர்

## சம்மேளனத்தின் தீர்மானங்கள்

தமிழ் மாகாண கைத்தறி நெசவுத் தொழிலாளர் சம்மேளனத்தின் காரியக் கமிட்டிக் கூட்டம் ஜூலை மாதம் 18, 19 தேதிகளில் சென்னை மாகாண தொழிற் சங்கக் காங்கிரஸ் ஆபீஸில் சம்மேளனத்தின் உபதலைவர் தோழர் பி. பாலச்சந்திர மேனன் அவர்களுடைய தலைமையில் நடைபெற்றது. தமிழ் நாட்டின் எல்லா ஜில்லாக்களிலிருந்தும் அங்கத்தினர்கள் தவிர சுமார் 60 ஊழியர்களும் வந்திருந்தார்கள்.

பின்கண்ட முக்கியமான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

தற்சமயம் அகில இந்திய நூல் வினியோக திட்டத்தின்படி நமது மாகாணத்தில் உள்ள 5 லக்ஷம் தறிகளுக்கு பத்து நாட்களுக்குத்தான் போதுமான நூல் கிடைக்கிறது. அதற்குக் காரணம் முனபிருந்த அட்வைஸரி சர்க்கார் தாமஸ் துரையின் (Fact Finding Committee) "உண்மை அறியும் கமிட்டி"யால் நமது மாகாணத்திலுள்ள மொத்த தறிகள் 3 லக்ஷம்தான் என்ற அடிப்படையில் நமது மாகாணத்திற்கென நிர்ணயிக்கப்பட்ட 21,305 பேல்கள் போதும் என ஒப்புக்கொண்டிருப்பதால்தான், நமது மாகாணத்தில் உள்ள 5லக்ஷம் தறிகளுக்கும் மாதத்தில் குறைந்த பக்ஷம் 20 நாட்கள் வேலை செய்யப் போதுமான நூல் சப்ளை செய்வதற்காக நமது மாகாணத்திற்காக நிர்ணயிக்கப்பட்டிருக்கும் 21,305 பேல்களிலிருந்து 38880 பேல்களாக அதிகரித்துக் கொள்ள மத்திய சர்க்காரை வற்புறுத்த வேண்டுமென்று காங்கிரஸ் மந்திரி சபையைக் கேட்டுக்கொள்ளப்பட்டது. நூல் பஞ்சத்தையும், துணி நெருக்கடியையும் போக்க கதர் உற்பத்தி அதிகரிப்பு திட்டத்தை அமுல்நடத்த கண்ட்ரோல் அதிகாரிகளின் கையில் ஒப்படைத்திருப்பதால் மாகாணத்தில் பல ஜில்லாக்களில் பலவந்தமாக மில் நூல் கார்டுகளைக் கான்ஸல் செய்கிறார்களென்றும், ஸ்தலத்தில் உள்ள அகில பாரத சர்க்கா சங்கத்தின் கிளைகளால் சிபார்சு செய்யப்படும் நெசவுத் தொழிலாளர்கள் அவர்கள் விரும்பினால்தான் கதர் தறிக்கு மாற்ற வேண்டுமென்றும், இந்த விஷயத்தில் பலவந்தம் கூடாது. நமது மாகாணத்தில் கரூர் போன்ற இடங்களில் உள்ள கைத்தறி நெசவுத் தொழிற் சாலைகளை பாக்டரி சட்டத்தின் கீழ் கொண்டுவர வேண்டும் என்றும், அந்த பாக்டரிகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் தாங்களாக விரும்பியோ, பாக்டரி சொந்தக்காரர்களால் டிஸ்மிஸ் செய்யப்பட்டோ, சொந்தமாக தறிகளை வைத்துக்கொண்டு நடத்த விரும்பினால் அவர்களுக்குரிய நூல் ரேஷன் கார்டுகளை அவர்களுக்குக் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்றும், மேற்படி பாக்டரிகளில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு மாதம் 1, பஞ்சப்படி 100-/. கொடுக்கப்பட வேண்டும் என்றும், சர்க்காருக்கு பொய்க் கணக்கைக் கொடுத்துவிட்டு உபரியாக உற்பத்தி ஆன நூலைக் கள்ளமார்க்கட்டில் விற்று கொள்ளை லாபம் சம்பாதித்து பொது ஜனங்களுக்கு, நூல், துணிப் பஞ்சத்தை சிருஷ்டிக்கும் நயவஞ்சக மில் முதலாளிகளிடமிருந்து நூல் உற்பத்தி ஆலைகளின் நிர்வாகத்தை எடுத்துக்கொண்டு நடத்த முன்வர வேண்டும் என்று காங்கிரஸ் மந்திரி சபையைக் கேட்டுக்கொண்டும், அப்படி மில்களை சர்க்காரே எடுத்துக்கொண்டு நிர்வாகத்தை நடத்தாவிட்டால் மில்களிலிருந்துக் கள்ள மார்க்கட்டிற்கு நூல் போவதைத் தடுக்க முடியாதென்றும் வேறொரு தீர்மானம் சுட்டிக் காட்டியது. நூல் உற்பத்தியை அதிகரிக்கவும், நீடித்து உழைக்கக்கூடிய உறுதியான நூலைத்தயார் செய்யவும் சர்க்காரின் நூல் உற்பத்தி நிபுணர் ஒருவரும், ஸ்தல சட்ட சபை அங்கத்தினரும், மானேஜ்மெண்டின் பிரதிநிதி ஒருவரும், பஞ்சாலைத் தொழிலாளரின் பிரதிநிதி ஒருவரும் கைத்தறி நெசவுத் தொழிலாளரின் பிரதிநிதி ஒருவரும், சர்க்காரின் பிரதிநிதி ஒருவரும் அடங்கிய "நூல் உற்பத்தி போர்டு" (Yarn production Board) ஒன்று அமைக்கப்பட வேண்டுமெனக் கோரியும், கைத்தறி ஜவுளிகளுக்கு விலை நிர்ணயம் செய்யக் காங்கிரஸ் மந்திரி சபை முன் வந்திருப்பதைப் பாராட்டியும், கைத்தறி ஜவுளி விலைநிர்ணயம் செய்வதுடன் ரகவாரியாக கைத்தறி நெசவுத் தொழிலாளருக்குக் கொடுக்கப்படவேண்டிய கூலியும் எவ்வளவு என்று நிர்ணயிக்கப்பட வேண்டுமெனக் கோரியும், தற்போது கொடுக்கப்பட்டிருக்கும் கலர் நூல் லைசென்ஸுகளைக் கான்சல் செய்துவிட்டு கெட்டிச் சாய பாக்டரிகள் (Fast Colour Dyers) டைரக்ட் சாயப்பட்டரைகள் (Direct Colour Dyers) என்று இரண்டு லைசென்ஸ்களாகப் பிரித்து சாயப்பட்டரைகளுக்கு லைசென்ஸ் கொடுத்து, நெசவாளருக்கு வெள்ளை நூலாகவே கொடுக்க வேண்டுமென்றும், நெசவாளர்கள் தாங்கள் இஷ்டப்படும் பட்டரைகளில், இஷ்டப்பட்ட கலரை ஏற்கனவேயே நிர்ணயிக்கப்பட்டிருக்கும் சாயக்கூலி கொடுத்து சாயம் போட்டுக்கொள்ள அனுமதிக்க வேண்டுமென்றும், வேறொரு தீர்மானம் நிறைவேறியது. கிராமங்களில் உள்ள நெசவாளருக்குச் சௌகரியமாக 5 மைல் சுற்றளவுக்கு ஒரு நூல் சப்ளை ஸ்தலம் இருக்க வேண்டும் என்றும், நமது மாகாணத்தில் உற்பத்தி ஆகும் தாவணி, சேலை ரகங்களுக்கு "கரை (Border) வைப்பதற்காக மாகாண டெக்ஸ்டைல் டிபார்ட்மெண்டின் மூலம் செயற்கைப்பட்டு (Artificial Silk) வினியோகம் செய்ய வேண்டும் என்றும், நெசவாளரும் பொது ஜனங்களும் சேர்ந்து மதுரை, திருநெல்வேலி, கோவை, வட ஆற்காடு, தென்னாற்காடு, சேலம், செங்கற்பட்டு, மதராஸ் போன்ற ஜில்லாக்களில் கள்ளமார்க்கட் செய்த நூற்றுக் கணக்கான "நூல் திருடர்"களை கையும் களவுமாகப் பிடித்து டெக்ஸ்டைல் டிபார்ட்மெண்டு வசம் ஒப்புவித்திருந்தும் இதுவரை யாதொருவித நடவடிக்கையும் எடுக்காமலிருப்பதைக் கண்டு வருந்தியும் அவர்களை பேருக்கு அபராதம் மாத்திரம் விதிக்காமல், ஜெயிலில் அடைக்க வேண்டுமெனக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் போர் பாதையில்

சென்ற ஜூன் மாதம் 23-ந் தேதி சென்னையில் மெமோரியல் ஹாலில் ஒரு மகாநாடு நடந்தது. பங்கெடுத்துக் கொண்டவர்கள் சென்னை சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், குமாஸ்தாக்கள்; "நான்-கெஜடட் கவர்ன்மெண்ட் ஆபீஸர்கள் அசோஸியேஷன" மகாநாட்டை நடத்திற்று.

ஆயிரக்கணக்கில் கூட்டம். சென்னையிலிருந்து மட்டும் 500 பிரதிநிதிகள் வந்தனராம்! ஜில்லாக்களிலிருந்து பிரதிநிதிகள் அழைக்கப்படவில்லை. அது சென்னை ஜில்லா மகாநாடாக இருந்த போதிலும் சகோதரப் பிரதிநிதிகள் அநேகர் ஜில்லாக்களிலிருந்து வந்திருந்தனர்.

ஜீவாதாரமான கோரிக்கைகள் வலியுறுத்தப்பட்டன. சம்பள விகிதம், ஆள் குறைப்பு, பஞ்சப்படி, லீவ் விதிகள்.

ஜூலை முடிவதற்குள் அவைகளை ஏற்காவிட்டால் ஆகஸ்டு 8-ந் தேதி மாகாண மகாநாட்டைக் கூட்டி வேலை நிறுத்தப் போருக்கு முடிவு செய்வது என்றும் எச்சரித்து விட்டனர்.

ஜூலை முடியப்போகிறது! சர்க்கார் என்ன செய்கிறது?

சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் பிள்ளைப் பூச்சிகள் என்று சர்க்காரோ, பொது ஜனங்களோ கருத முடியாது. போஸ்டல் தொழிலாளிகள் சிப்பந்திகளும் சரி; மிலிடரி அக்கௌண்ட்ஸ் குமாஸ்தாக்களும் சரி, ஆயிரமாயிரமாக அணி வகுத்துப் போராட்டங்களில் இறங்கத் தயங்கவில்லையல்லவா?

யுத்தத்தின் பளுவெல்லாம் தொழிலாளி வர்க்கத்தின்மீதும், மத்தியதர வகுப்பாரின்மீதும் ஏகாதிபத்தியமும் இந்திய முதலாளித்துவமும் போடுகின்றன, யுத்தத்தில் அடித்த கொள்ளையெல்லாம் விதேசி-சுதேசி முதலாளித்துவத்தினிடம் போகிறது.

மலை மலையாய் பாரத்தைப் போட்டுக் கொண்டேயிருந்தால் பொறுமையே உருவான ஒட்டகமும் கீழே படுத்து விடுகிறதே! தொழிலாளியானாலும் சரி, பி.ஏ. படித்த குமாஸ்தாவானாலும் சரி நிமிர்ந்து நின்று போராடத்தான் செய்வார்கள்! அதில் ஆச்சரியமென்ன?

நான்-கெஜடட் ஆபீசர்களின் பிரதான குறைகள் என்னவென்று பார்ப்போம். சம்பள விகிதங்களில் உயர்வு, அலவன்ஸ், லீவ் வசதி அதிகரிப்பு, வேலை முறையில் முன்னேற்றம் ஆகியவற்றைப்பற்றி சென்ற 25 ஆண்டுகளாக சர்க்காரிடம் நேர்மையாக முறையிட்டுக்கொண்டு வந்துள்ளனர். செவிடன் காதில் சங்கு ஊதின கதையாக அது இருந்தது. அது மட்டுமல்ல; 1923லும் 1933லும் 1938லும் சர்க்கார் எந்த விதமான விசாரணைக் கமிட்டியும் ஏற்படுத்தாமல் தான்தோன்றித்தனமாக சம்பள விகிதங்கள் முதலியவற்றை நிர்ணயித்து வந்தது. இன்று பார்த்தால், விலைவாசி உயர்வு, வாடகை உயர்வு என்ற ஒரே உயர்வாய்ப் போய்விட்டது; சம்பளம் மட்டும் உயர மாட்டேன் என்கிறது.

மத்திய சர்க்கார் செய்திருப்பது போல உடனே ஒரு சுயேச்சையான விசாரணைக் கமிட்டியை நியமித்து அதன் சிபார்சுகளை உடனே அமுலுக்கு கொண்டுவர வேண்டுமென்றும், இடைக்காலத்தில் ஈடு கொடுக்கும் வகையில் தகுந்த அளவுக்கு அலவன்ஸ் தரும்படியும் அவர்கள் கோரியுள்ளனர்.

மறைமுகமான ஆள் குறைப்புத் திட்டம்வேறு பயமுறுத்தி வருகிறது. ஆயிரக்கணக்கில் டெம்பரரியாக பல வருடங்கள் வேலைபார்த்து வரும் ஆபீசர்களுக்கு வேலை பெர்மணண்ட் செய்யாத முறையில் சென்ற வருடமே சர்க்கார் உத்தரவு போட்டிருக்கிறது. அதுமட்டுமல்ல; 1943-க்குப் பின்னர் யுத்தகாலத்தில் சர்வீஸில் சேர்ந்த குமாஸ்தாக்களின் விதியும் அப்படியேதானாம்! ஏனென்றால், யுத்தத்திற்கு சென்று திரும்பியுள்ளோருக்கு வேலைகளை காலி செய்து கொடுக்கதானாம். இந்த அசுரத்தனமான திட்டத்தினால் 5000க்கு மேலாக இன்று வேலைசெய்யும் குமாஸ்தாக்கள் நிர்க்கதியாய்த் தவிக்க நேரிடும். இதை மகாநாடு எதிர்க்கிறது. சர்வீஸ் கமிஷன் மூலம் வேலைக்குப் பொறுக்குவதை உடனே நிறுத்தி வைத்து இனிமேல் ஏற்படும் ஸ்தானங்களுக்கு யுத்த சர்வீஸ் ஆட்களை நியமிக்கட்டும் என்று யோசனை கூறியுள்ளனர்.

வீட்டு வாடகை கண்ட்ரோல் ஆர்டரை வீட்டுச் சொந்தக்காரர்களும் இதர பண மூட்டைகளும் ரத்து செய்யும்படி கிளர்ச்சி செய்வதை எதிர்த்து, கண்ட்ரோல் நீடிக்க வேண்டுமென்றும், இல்லாவிட்டால் பாதிக்கப்படுவர்கள் முதலில் தாங்கள் தானென்றும் எடுத்துக்காட்டியுள்ளனர்.

ஏ, பி. ஸி, என்று வகுப்புகளாகப் பிரித்து சம்பள விகிதங்களைப் போட்டிருப்பதை கைவிட வேண்டுமென்றும் தீர்மானம் சொல்கிறது.

ரிடையர் ஆனவர்களை மறுபடியும் வேலைக்கெடுத்துக் கொள்ளக் கூடாது. 50 வயது அடைந்துவிட்டவர்களும், 25 வருட சர்வீஸ்பார்த்தவர்களும் விரும்பினால் ரிடையர் ஆவதற்கு உரிமை தரவேண்டும்.

ரூ. 200 சம்பள விகிதத்துக்குள் இருப்போருக்கு வருடா வருடம் ரூ. 10 சம்பள உயர்வு தரும்முறையில் விதிகள் உடனே வகுத்து விட வேண்டும்.

இன்னும் இவைபோல பல முக்கியமான கோரிக்கைகள் சமர்ப்பித்திருக்கின்றனர்.

மகாநாடு முடிந்து ஒரு மாதமாகப் போகிறது. சென்னை சர்க்கார் நகராமலேதான் இருக்கிறது.

ஆனால் குமாஸ்தாக்கள் சும்மா விருந்து விடவில்லை. இராஜதானியில் 22 ஜில்லாக்களில் "செயல் கமிட்டிகளை" அமைத்து மும்முரமாக சங்கத்தை பலப்படுத்தும் வேலையில் ஈடுபட்டுள்ளனர். 700 அங்கத்தினர்கள் கொண்ட சங்கம் மூன்றே மாதங்களில் 5000 பேரைக் கொண்ட பலத்த சக்தியாகிவிட்டது:

ஆகஸ்டு 8-ந்தேதி வரப்போகிறது. மந்திரி சபை இதை உடனே கவனித்தாக வேண்டும். தொழிலாளி வர்க்கமும், பொது ஜனங்களும் அவர்களின் கோரிக்கைகளை ஆதரிப்பது நிச்சயம். அதற்கு ஆணித்தரமான அத்தாட்சி ஜூலை 23-ந் தேதியன்று சென்னை ஜெனரல் ஸ்ட்ரைக் இருக்கிறதல்லவா!

## பர்மா

# சுதந்திர சக்திகளை பிளவுபடுத்த சதி

பர்மாவில் தேசீய ஒற்றுமை ஏற்பட்டிருக்கிறது. அதைச் சிதறடிக்கும் நாசகாரப் பணியில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் படுதோல்வியுற்றது.

சமீபத்தில் பர்மா கம்யூனிஸ்டுக் கட்சியில் பிளவு ஏற்பட்டது. தாக்கின்ஸூவின் தலைமையில் சில தலைவர்கள் ஒரு புதிய கட்சியை அமைத்தார்கள். பழையகட்சியின் தலைவர் தாக்கின்தான்டுன் இருகட்சிகளுக்குமிடையே அபிப்பிராய வித்தியாசம் பிரமாதமாக ஒன்றுமே கிடையாது. எனவே, இரண்டையும் ஒன்றுபடுத்த சமரசப் பேச்சு வார்த்தைகள் நடந்துகொண்டிருந்தன. ஒற்றுமை ஏற்படும்போலிருந்தது.

இந்தச் சமயத்தில், சர்வாதிகார பர்மா சர்க்கார் தாக்கின்ஸூவின் கட்சியைச் சட்டவிரோதமாக்கிற்று. ஒரு கட்சியைச் சட்டவிரோதமாக்கி மற்றொரு கட்சிக்கு அனுமதி கொடுத்து ஏற்கெனவே ஏற்பட்டிருந்த பிளவை இன்னும் அதிகரிக்கத்தான் இந்தச் சூழ்ச்சியைக் கையாண்டிருக்கிறது. அதாவது தேசீய ஒற்றுமையை உடைத்தெறிந்து, முதலில் தாக்கின்ஸூவின் கட்சியையும் பின்பு தாக்கின்தான்டுன் கட்சியையும், ஆங்ஸான் தலைமையிலுள்ள பாஸிஸ்டு எதிர்ப்பு ஸ்தாபனத்தையும் சட்டவிரோதமாக்குவதற்கு அங்குரார்ப்பணம் போட்டிருக்கிறது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம். ஏகாதிபத்தியத்தின் இந்த அடக்கு முறை, இரு கட்சிகளையும் பிளவுபடுத்துவதற்குப் பதிலாக, பொது எதிரியோடு போராட இரு கட்சிகளுக்குமிடையே ஒற்றுமையை வளர்க்கும் என்று பர்மாவிலுள்ள ஏகாதிபத்திய எதிர்ப்பாளர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

26ந்தேதியன்று தாக்கின்ஸூவின் கட்சி அடக்குமுறையை எதிர்த்து ஒருநாள் பொது வேலை நிறுத்தத்தையும், ஆர்ப்பாட்டத்தையும் நடத்தப்போகிறது. பாஸிஸ்டு எதிர்ப்பு லீக் இதில் பங்கெடுத்துக்கொள்ள மறுத்துவிட்டது. ஆயினும் தாக்கின் தான்டுனின் கம்யூனிஸ்டுக் கட்சி இதில் பங்கெடுத்துக்கொள்ளப் போகிறது. கம்யூனிஸ்டுகளைப் பிரிக்கும் சூழ்ச்சி முறியடிக்கப்பட்டது.

Printed & Published by P. RAMAMURTHI at the "Janasakthi" Press, 1/6, Davidson Street, G.T., Madras. Regd. No. M. 4514